# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – ஐப்பசி
2020 – அக்டோபர்

ரூ 100

24.09.2020 அன்று நடைபெற்ற தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின்
9ஆவது ஆண்டு குருபூசை வழிபாடு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி - ஐப்பசி
2020 - அக்டோபர் இதழ் - 100

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்



சத்தியநிட் களநிருவி காரநிரஞ்

சனபரசை தன்னி யத்தை

மெத்தியநன் மலர்மணத்தில் பிரியாமை

உருவிடத்தும் விளங்கக் காட்டிப்

பொத்தியபேர் அவிச்சை கெடுத்து எவ்வுயிர்க்கும்

சுவாநுபவப் பொலிவு நல்கும்

நித்தியகல் யாணபரா பரை இருபொன்

தாட்கமலம் நினைந்து வாழ்வாம்.

*– கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

***சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்***

சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் சித்தி அடைந்து ஒன்பது ஆண்டுகள் நிறைவு பெற்றுவிட்டன. அவருடைய கொடை அருளாலே, வள்ளல் தன்மையாலே கோவிலூர் கிராமம் ஓர் கல்வி ஊராக மாற்றம் கண்டு இருக்கிறது. அவர்களுடைய அருளாசியினால் மேன்மேலும் வளர்ந்து பல்கிப் பெருகக் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்திக்கிறோம். அவர்களுடைய கொடைத் தன்மை குறித்து நாம் அவர்களுடைய 80ஆம் ஆண்டு நிறைவுக் காலத்தில் எழுதிச் சமர்ப்பித்த கவிதையை நினைவு கூறுகிறோம்.

வள்ளன்மை

கறுத்துக் கொட்டும் கார்மேகம்
கனமாய் இடித்துங் காட்டும்அதே
பறித்துப் போடும் வாழ்வதனைப்
பருவந் தப்பிப் பெய்தாலே
சிரித்துக் கொடுப்பாய் மென்மேலும்
சிறக்கக் கொடுப்பாய் தேவையது
நிறுத்துக் கொடுப்பாய் உன்கொடையால்
நிறைவே வாழ்வே யாவர்க்கும்

எழுவர் வள்ளல் என்பார்கள்
எல்லாப் பொருளும் ஈந்தார்கள்
வழுத்தும் நூல்கள் என்றாலும்
வளர்ந்த பயனும் குறைவன்றோ
வளர்ந்து பயன்பெற வித்திட்டாய்
வளர்க்கும் பொறுப்பும் நீகொண்டாய்
அளந்து தருவாய் செட்டிமகன்
ஆக்கம் பெறவே தருவாயே!

கொடைமடம் கொள்ளா வள்ளல் நீ
கொள்ளாப் பயனோ மிகவாமே
தொடர்ந்து வளரும் தருமங்கள்
தொடங்கிக் காப்பாய் உன்கொடையால்

திடம்பட நிற்கும் கலைக் கூடம்
　　தெளிய வைக்கும் அறக்கல்வி
கடவுள் சார்ந்த கலையெல்லாம்
　　கட்டிக் காப்பாய் கொடையாலே
இல்லை என்னா இயற்பகையும்
　　எல்லாம் கொடுத்த அழகனுமே
வள்ளற் குணத்தின் மகுடங்கள்
　　வணிகக் கோயிற் கலசங்கள்
இல்லம் நாடி உணவீந்தீர்
　　இளைஞர் கற்கப் பொருளீந்தீர்
இல்லை யாரும் உமக்கீடே
　　எங்கள் தேவன் நீர்தானே!

மேலே எழுதப்பட்ட கவிதையிலே கற்பனையோ மிகைப்படுத்தலோ எள்ளளவும் இல்லை. அவர்களுடன் ஏறக்குறைய 15 ஆண்டுகள் உடனிருந்து பணியாற்றிய பாக்கியம் பெற்றவர் நாம்.

எனையும் நம்பிப் பணிகொண்டாய்
　　இல்லை அதற்குக் கைம்மாறே
உனையே நெஞ்சில் நிதம்பணிந்து
　　உண்மை அன்பு நேர்மையுடன்
பணியே செய்வேன் பதமலரைப்
　　பணிந்தே நிற்பேன் உன்னருகே
எனையாள் அத்தன் நீ யானால்
　　எல்லா நலமும் உனதடியே!

என்று அன்று கொடுத்த வாக்குறுதியை இயன்றவரை இன்று வரை காப்பாற்றி வருகிறோம். அவர்களுடைய அருளாலே நம்முடைய வளாகத்தில் ஏறக்குறைய 300 அன்பர்கள் பணி செய்கிறார்கள். 3000 மாணவர்கள் கல்வி கற்கிறார்கள். அனைத்து மாணவர்களும் பொருளாதாரத்திலும், சமூக நிலையிலும் மத்திய தரம் அல்லது சற்றே கீழ் நிலையில் உள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் கல்வி கற்க நம்முடைய குருநாதர் அருளாசியினாலே குறைந்த கட்டணம் வசூலிக்கிறோம்; அதிலும் சில குழந்தைகளுக்குச் சலுகைகள் அளிக்கிறோம்.

இன்றைய கொரோனா தொற்றுக் காலத்தில் கடுமையான பொருளாதாரச் சிக்கல் உள்ள நேரத்திலும் நம்முடைய ஆசிரியர்களுக்கு இதுவரை முழுச் சம்பளம் கொடுத்து வருகிறோம்.

இந்த கொரோனா தொற்று நோய் காரணமாக ஊரடங்கு என்ற பெயரிலே பள்ளிக் கல்லூரிகளை மட்டும் திறப்பதற்கு அனுமதிக்காமல் வணிக வளாகங்கள், மதுபானக் கடைகள், ஓட்டல்கள் என மற்ற அனைத்தையும் வியாபார நோக்கோடும், மக்களுடைய வாக்குகளைப் பெறவும் திறந்துவிட்டவர்கள் பள்ளிகளைத் திறப்பதால் மட்டுமே கொரோனா பரவும் என்று கருதுவது ஏன்? என்று நமக்குப் புரியவில்லை.

ஓராண்டு கல்வி தவறினால் மாணவர்களுடைய வாழ்க்கையிலே பெரிய சரிவை ஏற்படுத்தும் என்பதையும் இந்த ஓராண்டுக் குறைபாட்டை நிறைவு செய்வதற்கு ஐந்து, ஆறு ஆண்டுகள் ஆகும் என்பதும் கல்வித்துறைக்கும் அரசாங்கத்திற்கும் ஏனோ தெரியவில்லை.

நம் போன்ற தர்ம ஸ்தாபனங்கள் முதலில் (Capital) இருந்து தொடர்ந்து மாதச் சம்பளத்தை கொடுத்து வருகிறோம். மற்ற தனியார் பள்ளிகள் 50% அல்லது 25% வரை சம்பளம் அளிக்கிறார்கள். இதனால் தனியார் பள்ளிகளில், கல்லூரிகளில் பணியாற்றுகின்ற லட்சக்கணக்கான ஆசிரியப் பெருமக்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்பதைக் கணக்கில் கொள்ளவில்லை. அவர்களின் வருமானத்தை ஈடுசெய்யும் வழியும் தெரிவிக்கவில்லை. இந்த 2020ம் ஆண்டு முழுமையாக வீணடிக்கப்பட்டுவிட்டது என்பதே உண்மை.

மாணவர்கள், தனியார் பள்ளிகள், கல்லூரிகள் அவற்றில் பணியாற்றும் ஆசிரியர்கள் அனைவரின் வாழ்வாதாரம் பாதிக்கப்பட்டுள்ளது. எதிர்காலம் மங்கலாகத் தெரிகிறது. இந்தச் சிக்கல்கள் தீரப் பரம்பொருள் ஒன்றே அருள்புரிய வேண்டும். நம்முடைய குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து இந்தச் சூழ்நிலை மாறி வளமான நிலை வரவேண்டும் என்று பிரார்த்திக்கின்றோம்.

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

## சசிவன்ன போதம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

29. *துகள்எனும் நன்குஅ லாத நுரைகள் தருவது*
*துறவுஎனும் இன்பம் ஆன கரையை விடஅகல்*
*மகளிர் எனும் வாத வவிய கழியது*
*மறவியும் அஞ்சு கோப வடவீ எரிவதே.*

30. *வெருவரு கின்ற போக முதலை உடையது*
*விவிதம் அனந்தம் ஆன துறையும் அறிபவர்*
*ஒருவர்க டந்து போக விரகில் எழுபவ*
*உததிவி எம்ப யாவர் உலகில் அறிகுரே.*

அடுத்து வரும் பாடல்கள்அனைத்தும் பூரணமாகப் பரம்பொருளைப் பற்றிய கருத்துகளை, தத்துவங்களை மிக எளிய முறையில் பாமரர்களும் மந்த அதிகாரிகளும் புரிந்து கடைப்பிடிக்கக் கூடிய வகையில் தத்துவராய சுவாமிகள் சொல்லியிருக்கிறார். வேதாந்தத் தத்துவம் முழுமையும் கருத்து அனைத்தையும் சாறு பிழிந்து மாணவர்களுக்கு எளிதில் செரிக்கும் வண்ணம் பழச்சாறாகக் கொடுக்கிறார்.

பிறப்பு இறப்பு எனக் கரைகளை உடைய ஆழமான பாவக்கடல் நீந்துவதற்கு அரியது. பிறப்பு இறப்பு என்ற பாவங்களை நீராகக் கொண்டவை; அறிவை முழுமையாக விழுங்கித் துயரங்களை ஆழ்த்தக்கூடிய ஆசை என்ற மிகப் பெரிய பாம்பை உடையது; கரணங்களை – ஞானேந்திரியம், கர்மேந்திரிய அந்தக்கரணம் என்று பல்லாயிரக் கணக்கான மீன்களை உடையது; விஷத்திற்கு ஒப்பான விடய சுகங்களை எப்பொழுதும் உற்பத்தி செய்து கொண்டே அலையும் கடலே குடும்ப சாகரம் என்பது.

சம்சார சாகரத்தை அலையாடும் கடலுக்கும் அளக்க முடியாத ஆழிக்கும் ஒப்பிட்டுப் பல தத்துவங்களைப் புரிய வைக்கிறார்.

சம்சார பந்தத்தாலே கட்டுப்பட்டுள்ள யாவரும் அந்தக்கரணங்கள், இந்திரியங்கள் ஆகியவையால் பல துன்பங்களை அடைகிறார்கள்.

மனமென்னும் அந்தக்கரணம் இந்திரியங்கள் உதவி கொண்டு பல விதமான விருப்பங்களை ஆசைகளை உற்பத்தி செய்கின்றன. தூண்டி விடுகின்றன. இந்தத் தூண்டுதல்களாலே சம்சாரி பலவிதமான கருமங்களைச் செய்து ஆசைகளைத் திருப்தி செய்யவும் தேவைகளைப் பூர்த்தி செய்யவும் முயல்கிறார். ஆனால் ஆசைகள் தீர்வதில்லை; தேவைகள் நிறைவடைவதில்லை. நிறைவேறுகின்ற அனைத்து ஆசைகளிலும் சில குறைபாடுகள் மனதில் பதிந்து விடுகின்றன. அத்துடன் கர்மங்களைச் செய்கின்ற பொழுது உடல் உழைப்பும் பலவித சோதனைகளும் எதிர்வருகின்றன. இவற்றால் மனம் பெரும் துன்பத்தை அடைகின்றது. எந்த ஜீவனும் பூரணமாக ஆசைகளை நிறைவேற்றி விட்டேன் என்று திருப்தி அடைவதில்லை; ஒன்றை அடைந்தால் மற்றொன்று தொடர்ந்து வரும் வகையான ஆசைகளை உருவாக்கி ஜீவர்களை அலைக்கழிக்கும் அந்தக்கரண இந்திரியங்களை கடலில் உள்ள மீன்களுக்கு ஒப்பிடுகிறார். அகங்காரம் என்ற அந்தக்கரணம் சாதாரண பொருளாதார (உலகாயத) அறிவையே ஞானம் என்று கர்வம் கொண்டு அலைகின்றது. இந்த அந்தக்கரணத்தால் பல துன்பங்கள் துயரங்கள் ஏற்பட்டு மனம் நாற்றத்தால் பாதிக்கப்பட்டு மாமிசம், செத்த மீன்கள் போன்று ஆகின்றது. எப்பொழுதும் தொடர்ந்து மாறிமாறி வருகின்ற இன்ப துன்பங்களைக் கடல் அலைகளுக்குஒப்பிடுகிறார். ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது என்ற முதுமொழிக்கு இணங்க அகந்தையை ஆமையாக உவமிக்கிறார்; அதுவும் அதிக அளவிலே உள்ளதாக உவமிக்கிறார். சம்சார சாகரத்திலே எதிர்பார்த்து வரும் துன்பங்கள் சந்தோஷங்கள் தவிர எதிர்பாராத வகையில் பல துன்பங்கள் சோக நிகழ்வுகள் நிகழவும் அவற்றையெல்லாம் கடல் அடியில் மறைந்து காணப்படும் குன்றுகளுக்கும் கட்டாந்தரைகளுக்கும் ஒப்பிடுகிறார். ஜீவன் செலுத்தும் படகு தெரியாமல் குன்றுகளிலும் கட்டாந்தரைகளிலும் மோதினால் அழிந்து போகும்; அது போல ஆசை அதன் விருப்புகள் ஆகியவை சீவனை அழிக்கக் கூடியவை. சம்சார பந்தத்தால் நல்ல பயனே தராத பலவிதமான விகற்பங்கள் - பிறப்பு, வளர்ச்சி, இளமை (யௌவனம்) நரை திரை மூப்பு நோய் நொடி பிறப்பு ஏற்படலாம். பெண்களால் ஏற்படும் (ஆண்களால் ஏற்படும்)

ஆசாபாசங்கள் தப்பிக்க முடியாத வன்மையான சூழல் விடுதலை அளிக்கக் கூடிய துறவறம் என்னும் கரையை அடைய விடாத பந்த பாசங்கள் என்கிறார். எமனையும் அஞ்சவைக்கக் கூடிய தீக்கனல் போன்ற கோபங்கள், ஆகியவை அனைத்தும் கடலில் தோன்றும் நுரைகளுக்கு ஒப்பானவை. ஜீவன் விரும்புகின்ற மோகத்தை முதலைக்கு ஒப்பிடுகிறார். ஆசாபாசங்கள் ஆறாத சினம், அடங்காத அகந்தை யாவையும் சீறிவருகின்ற முதலைக்கு ஒப்பாகும் என்று உரைக்கிறார். நால்வித தர்மங்களையும் முன்னோர் சொல்லிய நெறிமுறைகளையும் நன்கு அறிந்தவர் என்று எண்ணப்படுகின்ற பெரியவர்களால் கூட, பிறவிக் கடலைக் கடக்க முடிவதில்லை. ஜீவனாகப் படைக்கப்பட்டவர்கள் பாவக்கடலைக் கடந்து கரையேற வழி சொல்லத் தக்க அறிஞர் யாரும் உளரோ? இல்லை.

31. *பொறிவழி சென்று மீளும் அவலம திகொடு*
*பொருசம யங்கள் ஆறும் மறியவி மும்அதில்*
*அறிவுஅழிவு ஒன்றுஇ லாதபொ ருள்எது என உள*
*அனுபவ வங்கம் ஏறும் அறிஞர் அகல்வரே.*

ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் வழியாகச் செயல் படுகின்ற மதி கொண்டு பரம்பொருளைப் பலவித சமயங்களாகப் பிரித்துக் கொண்டு ஒன்றுக்கொன்று போரிடுவது அறிவில்லாத செயல்; அது சமயவாதிகளும் ஒருவருக்கொருவர் வாதம் செய்வது வேண்டாத காரியம்; என்றைக்கும் அழிவில்லாத பொருள் எது என அறிந்து அப்படிப்பட்ட பொருளை ஞானத்தை அனுபவமாக உடைய ஞானிகள் கரை சேர்வர்.

32. *புணரி கடந்து போக விரகுஇல் எனமொழி*
*பொழுது புலம்பி ஆவி புதல்வன் இறும்முனம்*
*உணர்வுஎ னும்வங்கம் ஏறும் அறிஞர் அகல்வர்என்று*
*உரையை வழங்கி நாதன் உவகை அருளவே.*

முனிபுங்கவர் இது வரை உபதேசித்த அருள் மொழிகளைக் கேட்டு சசிவன்னன் எனக்குக் கடல் கடந்து போகும் வலிமை கிடையாதே என்று புலம்பி அழ ஞானம் என்னும் கப்பலில் ஏறிச் செல்லும்

ஞானிகளால் கடக்க முடியும் என்று அறிவுரை தந்தார். இதனைக் கேட்டுத் தனக்கும் ஞானம் பெறவும் பாவக்கடல் கடக்கவும் இயலும் என்று எண்ணி மகிழ்வடைந்தான்.

33. *வாழிஎன இறைவன்அடி தொழுதுவரு பவமாம்*
*ஆழியினை அகலும் அறிவு அருளுகஎன அவரே.*

குருபகவானே நீடுழி வாழ்க என்று அடி பணிந்து வணங்கி எனக்கு ஏற்படக்கூடிய பிறப்பு இறப்பு (ஆழியை) என்ற மிக ஆழமான கடல் பகுதியைக் கடப்பதற்கு ஞானத்தை அளித்து அருள்வீராக என்று வேண்டி நின்றான்.

34. *பரஅறிவும் அபரஅறிவும் எனவும்இரு பரிசாத்*
*திரஅறிவை அறியும் அவர் மொழிவர்தெளிவு உறவே.*

அறிவு என்பது இருவகைப்படும். பரஅறிவு, அபர அறிவு. அபர அறிவு என்பது உலகாயத அறிவைக் கூறுகிறது. பொருள், காட்சி, உயிர்கள், பருவநிலை, பொருளாதாரம், நிர்வாகம் போன்றவற்றைத் தெரிந்து கொள்வது அபர அறிவு ஆகும். பர அறிவு என்பது ஏக அறிவு. இரண்டற்ற பூரணமான பரம்பொருளைப் பற்றிய அறிவு. முன்னவை அனான்ம அறிவு. மற்றது ஆன்ம அறிவு; பர அறிவை நிறைவாகக் கொண்ட குருமகான் சீடனுக்குத் திடமான பர அறிவைப் புரியும் படி உரைக்கத் தொடங்கினார்.

35. *அபரஉணர்வு அருமறைகள் முதல்அகில கலையும்*
*உபரமது அறஉதவும் உணர்வுபர உணர்வே.*

அபர அறிவு என்பது அனைத்துப் பொருள்களின் அறிவு விஷய புத்தி வேதங்கள், புராணங்கள் அனைத்துக் கலைகள் ஆகியவற்றைப் பற்றிய அறிவு பர அறிவாகும். இவற்றின் பந்தத்தை தீர்ப்பதற்கும் சம்சார பந்தம் அகல்வதற்கும் உதவும் ஞானம் பர அறிவு ஆகும்.

36. *ஆகமவி தங்கள்அறி வார்அபரம் அறிவார்*
*யோகமொடு உறங்கும்அவ ரேபரம் உணர்ந்தோர்.*

வேத ஆகமங்கள், 64 வகைக் கலைகள், இலக்கியங்கள் அனைத்தையும் கற்று உணர்பவர்கள் அபரஞானம் உடையவராவர்; தியானத்தில் தவத்தின் யோகத்தின் மூலமாகச் சமாதி நிலை அடைந்து பரம்பொருளை உணர முயற்சிக்கும் பெரியவர்களே, ஞானிகளே, பரஞானம் அடைந்தோர்.

**37.** *புராணம்இதி காசம்எவை யும்பொருள் அனைத்தின்*
*பிராணனறி யாதுள இடத்துஇவை பிதற்றே.*

புராணம், இதிகாசம், இலக்கியம், இசை எல்லாப் பொருளும் அடைந்திருந்தாலும் பரம்பொருள் பற்றி அறியாதவர் அறிவு வீணேயாகும்; அவர் கூறும் மொழிகள் பிதற்றலே ஆகும்.

**38.** *இயல்அறிவது இசைஅறிவது இனம்அறிவது உளவாம்*
*அயல்அறிவது அறிவதுஅல அறிவுஅறிவது அறிவே.*

இயல், இசை, நாடகம் என மொழிகளின் இனங்களை அறிவது அபரஅறிவு ஆகும். உலகாயதத்திற்குத் தான் பயன்படும். தன்னுடைய உண்மையான ஆன்ம சொரூபத்தை உணர முயல்வதே உண்மை அறிவு, பர அறிவு ஆகும்.

**39.** *நவிலுகலை அறுபத்து நாலும் அறிவாரும்*
*பவலயம்அது அறுகத்த பரமம்அறி யாரே.*

64 கலைகளை ஐயம் திரிபறக் கற்றுப் புலமை பெற்றோர் பிறப்பு இறப்பு இல்லாத நிரந்தரமான பரம்பொருளை அறயாதவர்கள் ஆவார்கள்.

**40.** *ஆகஅறி வாளர்இவைய னைத்தும்*
*ஏகஅறி வாளர்இவை யாவும்அறி யாரே.*

உடல் பற்றிய அறிவை உடையவர்கள் தன்னையே தன் உடலே தான் என்ற எண்ணம் உடையவர்கள் பல கலைகளைக் கற்றுத் தேர்ந்து வல்லவர்களாகப் பிரகாசிக்கலாம். பரம்பொருள் பற்றி அறிய மாட்டார். ஆனால் பரம்பொருள் ஒன்றையே ஏகாக்கிரமாகத் தான் பரம்பொருளின் சொரூபமே என்று உணரும் அறிவே பயனுள்ள அறிவு. பரஞானம் பெற்ற ஞானிகளுக்கு மற்ற கலைகளைக் கற்று அறிய வேண்டிய அவசியமில்லை.

**41.** *ஐயறிவு அறிந்துஅவை அடங்கின வரேனும்*
*மெய்யறிவுஇ லாதவர்கள் வீடது பெறாரே.*

ஐம்புலன்களைப் பற்றி முழுமையாக அறிந்து அவற்றின் செயல்பாடுகளை உணர்ந்து அது செய்யும் நன்மை தீமைகளையும் பகுத்து அறிய வல்லவர்கள் ஆனாலும் அவற்றை அடக்கி ஆளக் கற்றவர்கள் ஆனாலும் உலகாயத வாழ்க்கையிலே நல்லவர்களாக

வாழலாமே தவிர, பரம்பொருளை உணர்ந்து அனுபவிக்க வழிகாட்டும் பர அறிவு இல்லாதவர்களே ஆவார்கள். இப்பொருளை வலியுறுத்தித் திருவள்ளுவர் கூறுவது ஒப்பு நோக்கத் தக்கது.

*ஐயுணர்வு எய்தியக் கண்ணும், பயன் இன்றே (பயன்)*
*மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.* *குறள் : 354*

மேலும் திருமந்திரம் 1758 ம் பாடலும் 2339 ம் பாடலும் இதே கருத்தினைக் கூறும்.

*ஒன்று எனக் கண்டேன்எம் ஈசன் ஒருவனை*
*நன்று என்று அடியிணை நான் அவனைத் தொழ*
*வென்ற ஐம்புலனும் மிகக் கிடந்து இன்புற*
*அன்று என்று அருள்செய்யும் ஆதிபிரானே.*

*திருமந்திரம் : 1758*

*என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்*
*என்னை அறிந்தபின், ஏதும் அறிந்திலேன்*
*என்னை அறிந்திட்டு இருத்தனும் கைவிடாது*
*என்னை இட்டு, என்னை உசாவுகின்றேனே.*

*திருமந்திரம் : 2339*

42. *மெய்ம்மை அறிவு அல்லதமில் வேறு அறிவது எல்லாம்*
*தம்மைஅறி யும்அறிவ தேஅறிவு தானே.*

என்றும் அழியாத பரம்பொருளை அறிவது மெய் அறிவு ஆகும். மற்றவை எல்லாம் பயனற்றவை ஆகும். தம்மைத் தாம் அறிந்து கொள்வதே தான் பிரமத்தின் சொரூபம் என்று அறிவதே ஞானமாகும்.

43. *பூசனையும் அதுசகல பொருளும்அறி தமையும்*
*ஈசனையும் வேறதுஅற அறிவது அறிவு எனவே.*

கடவுளைப் பலபல பொருள்கள் கொண்டு - பூ, கனி, காய், வாசனைத் திரவியங்கள் ஆகியவை - அபிஷேகம் செய்து இறைவனுக்குப் படைத்து ஈசனை வணங்குதல். ஆனால் நம்மால் படைக்கப்பட்ட பொருள்களும் ஈசனும் வேறுவேறு அல்ல, யாவும் பிரம்ம சொரூபமே என்று அறிவதே ஞானம்.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### பிரம்ம ரிஷி விசுவாமித்திரர், அகலிகை

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

இராமனைத் தன்னுடன் அழைத்துவர முக்கியக் காரணமாக இருந்த அகலிகை சாப விமோசனம் நடைபெற வேண்டும் என்று விரும்பிய முனிவர் இராமனை அழைத்துக் கொண்டு ஆசிரமத்திற்குள் சென்றார்.

ஆசிரமத்தின் உள்ளே சில அடிகள் சென்றபின் இராமபிரானின் திருப்பாதத்துகள் பெற்றுக் கருங்கல்லாக இருந்த அகலிகை அழகுப் பெண் உருவாக எழுந்து நின்றாள். இராமனுடைய அருள் வண்ணத்தால் அகலிகை சாபம் பெற்ற அன்று எவ்வாறு இருந்தாளோ அவ்வாறே சாப விமோசனம் பெற்று இருந்தாள்.

**மைவண்ணத்(து) அரக்கி போரில்**
**மழைவண்ணத்(து) அண்ணலே. உன்**
**கைவண்ணம் அங்குக் கண்டேன்**
**கால்வண்ணம் இங்குக் கண்டேன்**

இந்த அகலிகை கதையை வால்மீகி, துளசி, கம்பர் மூவரும் கூறுகின்ற முறைதான் மாறுபட்டவையாக உள்ளன. அகலிகை சாப விமோசனம் பெற்று எழுந்தவுடன் இராமர் திருவடிகளை வணங்கி, தூய்மை இழந்தவள் என்னை உங்கள் திருமலர்ப் பாதத்துகள்கள் தூய்மைப்படுத்தி மீண்டும் தன் இயல்புடையவளாகச் செய்துவிட்டன. உங்கள் பாதார விந்தங்களுக்கு அடியாளின் நமஸ்காரம் என்று அடிபணிந்தாள். கௌதம முனிவர் சாபம் விடும் பொழுது கூறியது போல இராமர் வரவால் சாப விமோசனம் பெற்ற அகலிகை பகலின் மின்னல் போல் வந்து சேர்ந்தார். இராம இலக்குவர் முனிவர் பாதம் பணிந்து சாப விமோசனம் பெற்ற அகலிகையை ஏற்றுத் தொடர்ந்து ஆசிரமத்தில் தவங்களைச் செய்ய ஆரம்பித்தார்.

விசுவாமித்திர முனிவர் அகலிகை சாப விமோசனம் பெற்றதைக் கண்ணுற்று மிக மகிழ்ந்து இராமனை நோக்கி இராமா நீ தெய்வ அவதாரம் என்பது அகலிகை மூலம் உலகம் தெரிந்து கொண்டது

என்று மகிழ்ந்து கூறி மிதிலையை நோக்கி அரச குமாரர்களை அழைத்துச் சென்றார்.

## மிதிலைக் காட்சிகள்

மிதிலாபுரி எல்லையை அடைந்ததும் மிதிலாபுரியின் கோலாகலத் தோற்றம் கண்டு அரச குமாரர்கள் வியந்தார்கள். மிதிலாபுரியின் அரண்மனை, மாட மாளிகைகள், கூட கோபுரங்கள், கட்டி இருந்த கொடிகள், எங்கள் ஊரில் யாம் செய்த தவத்தின் பயனாகத் திருமகள் பிறந்து வளர்கிறாள். அவளைக் காணக் கமலச்செங்கண் ஐயனே ஒல்லைவா என்று அழைப்பது போல் வரவேற்று ஆடியது. நகருக்குள்ளே புகுந்ததும் இராம இலக்குவர் மிதிலாபுரியின் வளத்தைக்·கண்டு வியந்த வண்ணம் வந்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது நிலா முற்றத்திலே சீதை நல்லாள் நின்று நகர் வழியே வருகின்ற இராமரை நோக்கி மனநிலை தடுமாறப் பேருணர்வு அடைந்தாள். இதனைக் கம்பர் அழகாக

**எண்அரு நலத்தினாள் இனையள் நின்றுழி,**
**கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றைஒன்(று)**
**உண்ணவும், நிலைபெறா(து) உணர்வும் ஒன்றிட**
**அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.**

என்று கூறுகிறார். விசுவாமித்திரர் அரச குமாரர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு சுயம்வர மண்டபத்தை அடைகிறார். பின்னர் ஜனக மகாராஜாவிடம் இராமனுடைய குலம் பற்றியும் தசரதனுடைய வீரம் பற்றியும் எடுத்துரைத்தார். மேலும் இராமன் தன் யாகங்களைக் காத்தது பற்றியும், தாடகை வதம் செய்தது பற்றியும், அகலிகைக்கு மீண்டும் பெண் உருவம் கொடுத்தது பற்றியும் எடுத்துக் கூறி இராமனைச் சுயம்வரப் போட்டிகளிலே கலந்து கொள்ள மிக்க தகுதி உள்ளவன் என்பதை நிரூபித்தார்.

**தாடகைதன் உரம்உருவி,**
**மலைஉருவி, மரம்உருவி,**
**மண்உருவிற்(று) ஒருவாளி.**
**கோதமன்தன் பன்னிக்கு**
**முன்னை உருக்கொடுத்த(து) இவன்**

போதுவென்ற(து) எனப்பொலிந்த
பொலன்கழற்கால் பொடிகண்டாய்!

விசுவாமித்திர முனிவருடைய குணம், கோபம், வீரம், தவம் அனைத்தையும் அறிந்த ஜனக மகாராஜன் அவர் சொன்னது போல இராமர் வில் வளைத்து நாண் பூட்ட அழைத்தார். ஜனகர் இராமனிடம் எதிரே உள்ள வில்லை வளைத்து நாணேற்ற முயன்று தோற்றவர்கள் அதிகம். அகந்தையோடு வந்தவர்கள் அனைவரும் தோற்று முகம் குனிந்து ஓடினர். எழுந்து இந்த வில்லை வளைத்துப் பார் என்று கூற இராமன் வில்லைக் கையில் எடுத்தார். இவன் வளைப்பானோ தோற்பானோ எனக் கண் இமைக்காமல் பார்த்த அனைவரும் வில்லைக் கையில் எடுத்ததைக் கண்டனர், இற்றது கேட்டனர். அவ்வாறு எடுத்ததும் தெரியாமல் வளைத்ததும் தெரியாமல் வில்லை வளைக்க வில் ஒடிந்தது. இவ்வாறு சுயம்வரத்தில் வெற்றி பெற்று, சீதையின் மாலைக்குத் தகுதி பெற்றார். சீதை மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். சீதா இராமர் திருமணச் செய்தியைக் கோசல நாட்டிற்குத் தெரிவிக்கத் தூதுவன் பறந்து சென்றான் அதன் பின்னர் தசரதன் மனைவியர் மூவருடனும், புதல்வர்கள் இருவருடன் படைகளுடன் வந்து திருமண நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். சீதா இராமர் திருமண வைபவத்தில் அனைவரும் மகிழ்ச்சி கொண்டனர். அத்துடன் விசுவாமித்திரர் ஜனகரிடம் பரத இலட்சுமண சத்ருகணர் மூவருக்கும் பெண் கேட்டுத் திருமணம் பேசி முடித்துத் திருமணம் செய்து வைத்தார். ஜனகருடைய மகள் ஊர்மிளையை இலக்குவனுக்கும், ஜனகருடைய தம்பியான குஜத்துவஜனின் திருமகளாகிய மாண்டவியைப் பரதனுக்கும், சுருதகீர்த்தியைச் சத்ருகணுக்கும் மணம் செய்து கொடுக்க ஒப்புக்கொண்டு அவ்வாறே மூவர் திருமணமும் இனிதே நிறைவேறியது.

மேலே கூறிய செய்திகளிலிருந்து விசுவாமித்திரர் இராம இலக்குவரைத் தசரதனிடம் இருந்து அடைக்கலமாகப் பெற்று வந்த தினத்திலிருந்து நால்வர் திருமணம் நிகழ்ந்தவரை உற்று நோக்கினால் பால காண்டத்தினுடைய செயல்கள் அனைத்தையும் செய்த தூயவர் விசுவாமித்திர முனிவர் என்பது புரியும். இராம இலக்குவனுக்கு 500 விதமான தேவ அஸ்திரங்களைக் கற்பித்தது, தாடகை வதம், அகலிகை

சாப விமோசனம், ஜனகருக்குச் சூரிய குலப் புகழைத் தெரிவித்து இராமரைச் சுயம்வரப் போட்டியிலே பங்கெடுக்கச் செய்து வில்லை முறித்துச் சீதையை மணக்கவும் மற்ற மூவருக்கும் திருமண ஏற்பாடு செய்ததும், சீதா இராமர் கல்யாணம் அனைத்தும் விசுவாமித்திர முனிவராலே அவரின் தவ வலிமையாலும் ஆசியாலும் நிகழ்ந்தவை.

## அகலிகை

அகலிகையின் வடமொழிப் பெயர் அஹல்யா என்பது. ஹல்யா என்பது அழகு இல்லாதவள் என்று பொருள். அஹல்யா என்றால் எல்லா வகையிலும் அழகு நிறைந்தவள் என்று அர்த்தம். அகலிகை தேவ இராட்சச யுத்தத்தில் பாற்கடலைக் கடைந்த காலத்தில் பிறந்தவள். மேரு மலையை மத்தாகவும் ஆதிசேஷனைக் கயிறாகவும் கொண்டு தேவ, அசுரர்கள் பாற்கடலைக் கடைந்த காலத்திலே அமிர்தத்தைத் தேவர்கள் எடுத்து வந்தனர். நஞ்சினை அரக்கர்கள் எடுத்து வந்தார்கள். தேவ அசுரர்களையும், பிரபஞ்சத்தையும் காப்பதற்காகச் சிவபெருமான் நஞ்சை உண்டார். பார்வதி தேவியின் விரதத்தாலும் தவ வலிமையாலும் நஞ்சு கழுத்திலே தங்கி நின்றுவிட்டது. அமிர்தத்தைத் தேவர்கள் அனைவருக்கும் திருமாலும் சிவபெருமானும் பகிர்ந்து கொடுத்தார்கள். இந்தத் தருணத்தில் பல அதிசயப் பொருள்கள் பாற்கடலில் தோன்றின. பாற்கடலில் இருந்து கற்பகத்தரு, காமதேனு, சிந்தாமணி, கௌஸ்துபவமணி,சூடாமணி, லெட்சுமி, ஐராவதம், அஹல்யா முதலியன தோன்றின. எனவே அஹல்யா மிகப் பெருமை வாய்ந்த அதிசயப் பொருள்களுடனும், லெட்சுமியுடனும் தோன்றியவள். லெட்சுமியைத் திருமால் மனைவியாக ஏற்றுக் கொண்டார்.

பிரம்மா இருமுகம் கொண்ட பசு ஒன்றை வலம் வந்த ஒரு மகானே அகலிகையை மணக்கத் தகுந்தவன் என்று கட்டளை இட்டார். விச்சாதாரை என்னும் பெண்மணி வைகுண்ட லோகத்தில் மகாலெட்சுமியை வழிபாடு செய்து பிரசாதமாக மலர்மாலையைப் பெற்றுக் கொண்டு வந்தாள், அதனை மகாமுனிவர் துர்வாசருக்கு அர்ப்பணித்தாள். துர்வாச முனிவர் இந்திரன் பெயரில் கொண்ட அன்பினால் இந்திரனுக்கு அந்த மாலையை அளித்தார். மாலையின்

பெருமை அறியாத இந்திரன் தன் அகம்பாவத்தால் அந்த மாலையை ஐராவதத்தின் தலையில் வைத்தான். யானை அதைக் கீழே தள்ளிக் காலால் மிதித்து அழித்தது. இதனைக் கண்ணுற்ற துர்வாசர் உன்னுடைய செல்வம், இந்திரலோகம் அனைத்தும் அழியும் எனச் சினத்தோடு சாபம் கொடுத்தார். அதன் வழியாக அனைத்துச் செல்வங்களையும் இழந்தான் இந்திரன். அப்பொழுது தேவர்களும் இந்திரனும் சேர்ந்து முப்பெரும் கடவுளரை வேண்ட, திருமாலின் ஆலோசனைப் படி திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். அதிலிருந்து ஐராவதம், கற்பகம், காமதேனு, லெட்சுமி, அஹல்யா போன்றவர்கள் தோன்றினார்கள்.

நாரத முனிவர் அஹல்யாவைத் தகுதி வாய்ந்தவர்க்கு மணம் முடிக்க வேண்டும் என்று எண்ணினார். கௌதம முனிவரின் ஆசிரமத்தில் ஒரு நாள் பசு ஒன்று கன்று ஈனத் தொடங்கியது. கன்று பசுவிலிருந்து தோன்றும் காலத்தில் பசுவிற்கு இரண்டு முகம் இருப்பது போல் தோன்றும்.கன்று ஈனும் பசுவை வலம் வந்தால் எல்லாச் செல்வங்களையும் பெற்று உயர்ந்து வாழ்வார் என்பது பெரியோர் வாக்கு:நாரதர் கௌதமரை அந்தப் பசுவை வலம் வரச் செய்து, பிரம்மனிடம் சொல்லிக் கௌதமருக்கு அஹலிகையை மணம் முடித்து வைத்தார்.

கௌதம முனிவரும் அஹலிகையும் ஆசிரமப்பணி, தவங்கள், யாகங்கள் அனைத்தும் செம்மையாக முறையாகச் செய்து சிறந்த இல்லறத்தை நல்லறமாக நடத்திக் கொண்டிருந்தார்கள். இவர்களுக்கு சதானந்தன் என்ற ஒரு புதல்வன் பிறந்து வளர்ந்தான்.

தந்தை கௌதமரிடம் வேதம், வேதாந்தம், யாகம், ஆகமம், அனைத்தும் கற்றுத் தேர்ந்து ஜனக மகாராஜாவிடம் புரோகிதராக அமர்ந்தான். இதற்கு இடையில் மறைந்து திரிந்து வாழ்ந்து வந்த இந்திரன் இழந்த செல்வங்களை மீண்டும் பெற்று வாழத் தொடங்கினான். ஆனால் பாற்கடலில் உதித்த அஹல்யாகௌதமருக்கு மணம் முடிக்கப் பெற்ற செய்தி கேட்டு அயர்ந்து நின்றான். எப்படியாவது அஹலிகையை அடைய வேண்டும் என்று மும்முரமாக யோசனைகளும் திட்டங்களும் தீட்டி வந்தான்.

ஒரு நாள் விடிவதற்கு முன்பே சேவல் போல் கூவினான். கௌதமரும் விடிந்து விட்டது என்று நம்பி ஸ்நானத்திற்கு ஆற்றிற்குச் சென்றார். ஆற்றை அடைந்தவுடன் இன்னும் விடியல் நேரம் வரவில்லை என்று அறிந்து தன் தவ ஞான திருஷ்டியினால் இந்திரனுடைய சூழ்ச்சியை அறிந்து வேகமாக வீடு திரும்பினார்.

இதற்கிடையில் கௌதம முனிவர் வேடத்தில் இந்திரன் அஹலிகையை நெருங்கி அவளை அடைந்தான். அஹலிகை இந்திரனுக்கு இணங்கிய வகைபற்றி மூன்று இராமாயண ஆசிரியர்களும் வேறுபடுகிறார்கள்.

வால்மீகி ஆசிரமத்திற்குள் நுழைந்த இந்திரனைப் பார்த்து, தன்னுடைய கணவர் கௌதமர் வினோதமாகக் காம இச்சை கொண்டு தன்னைத் தொடுகிறார் என்று முதலில் எண்ணினாள். ஆனால் அவருடைய தவ வலிமை வந்திருப்பது இந்திரன் என்பதை அறிய வைத்தது. வந்திருப்பது இந்திரன் என்பதை அறிந்த பின்னும் இந்திரலோகத்தில் எத்தனையோ அப்சரஸ்கள் ஊர்வசி, மேனகை, திலோத்தம்மை போன்றோர் இருந்தும் அவர்களை எல்லாம் கண்டு களித்த இந்திரன் நம் அழகில் மயங்குகிறான் என்று எண்ணித் தன்னுடைய அழகின் மேன்மையால் அகம்பாவம் கொண்டு இந்திரனை ஒப்புக்கொண்டாள் என்று கூறுகிறார். எனவே அகலிகை மனம் அறிந்து பிழை செய்தவள். இந்திரனோடு கூடிக் காம இச்சைக்கு உட்பட்டவள் என்பது வால்மீகி கருத்து.

துளசிதாசர் உண்மையான பக்தர். எனவே அகலிகையைக் குறை கூறவோ. கௌதமரைப் பழி கூறவோ விரும்பாமல் அகலிகை இந்திரனிடம் ஏமாந்தாள் என ஒப்புக் கொண்டு கதையை நகர்த்துகிறார்.

கம்பனோ சீக்கிரமாகவே திரும்பி வந்து தன்னுடைய கணவர் காம இச்சை கொண்டு தன்னை அணுகுவதை வியப்பாகவும் மகிழ்வாகவும் கருதி ஆரம்பத்தில் இந்திரனை ஏற்றுக் கொண்டாள். ஆனால் அணுக்கம் அதிகமான காலம் தவ வலிமையால் வந்திருப்பவன் கௌதமன் அல்ல இந்திரன் என்பதை அறிந்து விடுபட முயன்றாள். ஆனால் காம இச்சை விடுபட விடவில்லை என்பது கம்பன் வாக்கு.

எது எப்படி இருந்தாலும் தெரிந்தோ தெரியாமலோ அகலிகை களங்கப்பட்டாள். திரும்பி வந்த கௌதமர் சினம் கொண்டு இந்திரன் அருவருக்கத் தக்க உடற்புண்களை ஏற்றுத் திரிவான் என்று சாபமிட்டார். அகலிகைக்கு உன் அழகால் உன்னை இழந்தாய். எனவே யார் கண்ணுக்கும் தெரியாத வண்ணம் கல்லாகக் கடவாய் என்று சாபம் இட்டார். அகலிகை முனிவரின் காலில் விழுந்து, உள்ளம் அறியாமல் செய்த பிழை, நான் களங்கப்பட்டவள் தான், சாபத்தை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் எப்போது விமோசனம் என்று கூறி அருள்வீர்! எனக் கண்ணீர் விட்டு அழுதாள். பல ஆண்டுகள் கழித்துத் தசரதன் மகன் இராமனுடைய திருவடித் துகள்பட்டுச் சாபம் நீங்குவாய். களங்கமும் அழியும், நானும் வந்து உன்னை ஏற்றுக் கொள்கிறேன் என்றார். அகலிகை கல்லாக மாறிய பின் முனிவர் இமயமலைச் சாரலுக்குச் சென்று பல நூறு ஆண்டுகள் தவம் இயற்றி வந்தார்.

விசுவாமித்திர முனிவருடைய ஆசியினாலும் அருளாலும் இராமபிரான் கௌதமருடைய ஆசிரமத்தில் நுழைந்து தன்னுடைய திருமலர்ப் பாதத் துகள்களால் அகலிகை சாப விமோசனமும் பாவ விமோசனமும் பெற்றாள். கௌதமரை மீண்டும் அடைந்தாள். இனிதே வாழ்ந்தனர்.

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 3

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

பன்னிரு ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத்திற்கும் உரைகளும் வியாக்கியானங்களும் உள்ளன போல ஈடு என்றதோர் உரை உண்டு. பரம் பொருளான பரந்தாமனைக் காட்டும் பாடல்களுக்கு ஈடாக அப்பரம் பொருளைப் பொருத்தமுறக்காட்டலால் வைணவசிரேட்டர் புருடோத்தம நாயுடு அவர்கள் தாம் வரைந்த உரைவளத்தை ஈடு என்றார்கள். இது அங்கத்திற்குப் பொருத்தமாகச் செய்யும் அங்கி போன்றதாகும்.

அதுபோல ஆழ்வார்கள் அருளிய பகவத்உத்த மோத்தம வாக்சல்ய பாடல்களைத் தாம் அனுபவித்த விதமாகக் காப்பியக் கவிஞர் மீனவன்

108 திவ்ய தேசத்தையும் தம் எழுத்துக்களால் அனுபவிக்கும் பரந்தாமன் பாமாலை வரிசையில் திருக்கண்டியூர் தொடங்கி ஆராதிக்கும் சில தலங்களை இக்கட்டுரை வழி தரிசிப்போமாக!

திருவையாற்றுக்கு அருகில் உள்ள திருக்கண்டியூரைத் திரிமூர்த்தி க்ஷேத்திரம் என்பர். மூலவர் ஹரசாப விமோசனப் பெருமாள் என்னும் திருநாமத்துடன் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் கமலவல்லித் தாயாருடன் வீற்றிருக்கின்றார். திருமங்கை மார்புடைய கண்டியூரானைத் திருமங்கை யாழ்வாரே மங்களாசாசனம் செய்துள்ளார்.

கண்டியூர் தொழுதால் தேயும் வினை என மீனவனார் பாடுதற் கேற்ப, சிவபெருமானுக்கு ஓடேந்தும் அவலத்தை நீக்கி அருள் செய்ததைச் சான்றாகக் காட்டப்பட்டுள்ளது மூன்றாம் பாட்டில்.

*கையிலே ஓடேந்தும் கண்ணுதலான் கை ஓடு*
*மெய்யாக நீங்கிடவே மேன்மை செய்த காரணத்தால்,*
*உய்யவரு கபால உயர்தீர்த்தம் அமைந்திருக்கும்*
*செய்யதிருக் கண்டியூர் சேருவார் வாழுவரே!*

பிண்டியார் மண்டை ஏந்திப் பிறர்மனைதிரி தந்து உண்ணும், முண்டியான் சாபம் தீர்த்த ஒருவன் ஊர் உலகம் ஏத்தும் கண்டியூர் - என்கிறார் திருமங்கை யாழ்வார்.

சிவபெருமானுக்குக் கபாலி என்ற பெயருண்டு. பிரம தேவனின் ஒரு தலையைக் கிள்ளி விட்டதால் அத்தலை சிவனது கையில் ஒட்டிக் கொண்டதாம், தேவர்கள் கூற்றுப்படி இக்கபாலத்தில் (மண்டையில்) தக்கோர் இடும்பிச்சையால் கபாலம் நீங்கும் என்றதால் பத்ரி நாராயணன் பிட்ஷையிடக்கபாலபாபம் ஒழிந்ததாம்.

இந்தப் புராண வைபவத்தைக் கவிஞர் மீனவனார் குடும்ப உறவின்படிப் பாடியுள்ளது தனிச் சிறப்புடையதாக உள்ளது. நாட்டமது மூன்றுடைய நாயகன் தன் மைத்துனனார் வாட்டும் பிறவி வலையறுக்க வந்த திருக் கண்டியூர் என-5 ஆம் பாடலில் கூறுகிறார். பரந்தாமனின் தங்கையாம் பார்வதியின் கணவன் என்பதால் இவனது பாவம் பிரமகத்தித் தோஷமாகி விட்டதால் சிவனுக்காகும் பிறவிப் பிணியால் துன்பம் நேர்ந்தால் அது தன் தங்கையைப் பாதிக்கும் என்பதால்

சிவனைப் பிழைக்க வைத்த கண்டியூர் என்றது பெரும் சிறப்பிற்குரியதாகும். அதனால் தான் கண்டியூர்ப் பெருமான் ஹரசாபவிமோசனப் பெருமான் எனப்பெயர் பெற்றார் )ஹர-கரம். அதாவது கை)

மேலும் திருவோண நாள்கொண்டாட்டமாக மாவலியின் கர்வம் அடக்கி இல்லங்கள் தோறும் எழுந்தருளிய வைபவம், பரந்தாமனின் புராண வரலாற்றில் இன்றியமையாததோர் இடமானதால் மாவலியின் பாவம் போக்கியதை நினைப்பிக்கும் விதமாக மாவலியின் வீறழித்தான் உறையும் கண்டியூர் (4) என்றார் மீனவர்.

இப்படிப்பாவம் போக்கும் கண்டியூரில் உள்ள பரந்தாமன் அகத்தியனாம் குடமுனிக்கே அருள் செய்தான் என்றதொரு புதுத்தகவலைத் தருகிறார் கவிஞர். இதுபற்றிய கதையை அபிதான சிந்தாமணி எனும் நூலில் அகத்தியர் பற்றிய விளக்கத்தில் காணலாம்.

சிவனது கட்டளையால் தென்திசை நோக்கி வந்த அகத்தியர், திருக்குற்றாலத்தில் இருந்த திருமாலைச் சேவிக்கச் சென்ற போது சிவவேடத்தாரை வைணவர் அனுமதிக்காததால் அகத்தியர் வைணவ வேடம் பூண்டு மூர்த்தியை வணங்கினாராம். அங்ஙனம் வணங்குகையில் திருமாலைச் சிவமூர்த்தமாக எண்ணியே வணங்கினாராம் எனத்திருக் குற்றாலபுராணம் கூறுகிறது. எனவே தான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யுங்கால் பகுத்தறிந்து பயன் கொடுப்பான் கண்டியூர் அகத்துடையார் (2) என்கிறார் மீனவர்.

இப்படிக் கண்டியூரைக் கண்டதும், கும்பகோணத்தருகில் உள்ள ஆடுதுறைப் பெருமான் கோவில் என்னும் திருக் கூடலூரில் வையங் காக்கும் தலைமைக் கோலத்தில் செங்கோல் தாங்கி, கிழக்கு நோக்கிய பரந்தாமனாம் ஜெகத்ரட்சகனைப் பத்மாசனித் தாயாரோடு நாம் சேவிப்போமாக!

இந்தத் திருக்கூடலூர்த் தலம், சங்கம க்ஷேத்திரம் என்பதாகக் கூறப்படும். வையங்காத்த பெருமாள் என இங்குள்ள பரந்தாமர் அழைக்கப் படுவதானது கிருத்துவ விவிலியத்தில் உலகை ரட்சிக்கும் கடவுளைத் தேவராஜா எனக் கூறற்குச் சமமாக உள்ளது.

பாட்டரசன் திருமங்கை பாடுதலம் (2) எனக் கவிஞர் திருமங்கை ஆழ்வாரின் மங்களா சாசனம் உடையதாகக் கூடலூரைத் தரிசிக்கச் செய்கிறார். முனிவர்கள் கூட்டமாய்க் கூடிவந்து தொழுதலால் கூடலூர் ஆனதாம். முத்தி தரும் திருமால் தலங்கள் ஏழினுள் துவாரகையும் ஒன்று. இங்கு உலகபார நிவர்த்திக்காக விட்ணு மூர்த்தியானவர் கிருட்டிணராய், பலராமராய், அவதரித்ததோடு இலக்குமி தேவியும் திரு அவதாரம் செய்ததால் துவாரகையைக் கூடுதுறை என்பதற்கேற்பத் திருக்கூடலூரை ஆடுதுறை எனப் பெயர் பெற்றதைக் கவிஞர், வீடருளும் துவாரகையான் கூடுதுறை நமக்கென்றே இருந்தருளும் ஆடுதுறை (5) என்கிறார்.

இத்தகு ஆடுதுறைப் பெருமானை வணங்கி வழிபட்டதும் கவிஞர் பக்தர்களைத் திருக்கவித்தலம் என்னும் கும்பகோணத்தருகே உள்ள கபிஸ்தலத்தில் கசேந்திர வரதனாக வீற்றிருக்கும் பரந்தாமனைச் சேவிக்கச் செய்கிறார், இதனைக் கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரம் என்றும் கூறுவதுண்டு. கிழக்கே பார்த்தவராய், புயங்க சயன கோலத்தில் பொற்றாமரையான் தாயாராம் ரமாமணி வல்லியுடன் சேவை சாதிக்கின்றார். திருமழிசை ஆழ்வாரின் மங்களா சாசனம் பெற்ற தலம்.

இத்திருத்தலப் பெருமானின் திருநாமத்திற்கேற்ப, கூற்றனைய முதலைவாய்க் குட்பட்ட வேழமதை ஊற்றமுடன் காத்தான் உறையுமிடம் கவித்தலம் (1) என்கிறார் மீனவர், இந்த வைபவத்தையே கவிஞர் மூன்று பாடல்களில் பாடுகிறார், குஞ்சரம் தனைக் காத்த கோமான் வரும் கவித்தலம் (2) மூலமே என அழைக்க முன் கதிக்கே உதவியவன் (3) என்பன கவிஞர் வாக்குகள்.

ஆதிமூலமே என யானை அழைத்த போது அந்த அழைப்போசை, சிவலோகம், பிரம்மலோகம், இந்திரலோகம் போன்ற இடங்களில் கேட்ட போது சிவன் - பிரம்மன் போவான் என்றும் பிரம்மன் - இந்திரன் போவான் என்றும் இந்திரன் - திருமால் போவார் என்றும் இருந்து விட்டார்களாம், ஆனால் திருமால் மட்டுமே வைகுந்தத்தில் அந்த யானையின் அவலக் குரல் கேட்டு யார் போனார்களோ எனக் கருதாமல் துன்பத்தை நீக்க ஓடோடி வந்ததால் திருமாலுக்கு ஆதிமூலம்

என்ற சிறப்புப்பெயர் அமைந்ததன் நுட்பத்தை மீனவர் மூலமே என அழைக்க வைகுந்தன் தஞ்சமென வந்தோர் தலைமுறையைக் காப்பாற்றும் அரவிந்த முகத்தழகன் கவித்தலத்தைப் போற்றுமினே என்பதாகக் கவித்துவத்தோடு பாடியுள்ளார்.

கவிதைக் கலையியலில், சிறந்த கவிதையைப்பற்றிக் கூறும் போது சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் அமைப்பது ஒரு கலை என்பர் (THE BEST WORDS IN THE BEST ORDER) இதனை மீனவரின் சொற்கள் உறுதிப் படுத்துகின்றன.

இந்தக் கஜேந்திர மோட்சத்தால் உணரப்படும் தத்துவத்தைத் திருமழிசையாழ்வார், கூற்றமும் சாரா, கொடு வினையும் சாரா, தீ, மாற்றமும் சாரா வகையறிந்தேன் எனக் கவித்தலத்தை நினைவு கூர்ந்து பாடியுள்ளார்.

தலத்தின் பெயரில் கவி, கபி என இருசொற்களில் எது சரி என உணர்கையில் கபிஸ்தலம் என்பதே சரி எனத் தெரிகிறது, கபி என்றால் சிறிய திருவடி எனப்படும் கருடாழ்வாரைக் குறிக்கும், அதற்கேற்பக் கருடனது பக்திக்கும் தரிசனம் தந்து திருவருள் செய்ததாக இத்தலத்தின் சிறப்பு கூறப்படுவதால் திருக்கபிஸ்தலம் என்றே கூறலாம், ஆனால் பி என்பது உச்சரிப்பில் வி எனப்பட்டாலும் கருடனுக்கு அருள்பாலித்த உண்மையால் கபித்தலம் என்றே கூறல் பொருந்தும், ஏனெனில் கவி என்பது குரங்கான அனுமனைக் குறிக்கும், ஆஞ்சநேயராம் அனுமனைப் பெரிய திருவடி என்பர். எனவே கும்பகோணத்துப் பாபநாசத்திற்கு அருகில் உள்ளதான பாப விமோசனத்தலமாய், கஜேந்திரப் புஷ்கர்ணியும் கபில தீர்த்தமும் உடையதாகக் கபித்தலமே உள்ளதாம் என்க.

இப்படி மரணமில்லாப் பெருவாழ்வருளும் கபித் தலத்திலிருந்து கவிஞர் நம்மைச் சுவாமிமலைக்கு அருகில் உள்ள திருப்புள்ளம் பூதங்குடியில் குடிகொண்டிருக்கும் வல்வில் இராமபிரானைச் சேவிக்கச் செய்கின்றார், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் செய்த திருத்தலம்.

திரு+புள்+அம் : திருப்புள்ளம் என இவ்வூர்ப் பெயரைத் தனித்தனியே பிரித்தறியும் போது கவிஞர்,

**புள்ளரையன் பூதவுடல் புகழ்சால் பரமபதம்**
**கொள்ளுமிடம் இது என்று கும்பிடும்.**

போற்றுவோம் எனக்கூறும் ஓர் உன்னத வைபவம் நடந்த ஊர் என்பதை உணர வைக்கின்றார், புள்பறவை. அது கழுகரசனாகிய சடாயு. இராவணன் சீதா பிராட்டியை வவ்விக் கொண்டு சென்றபோது பார்த்து மனம் கொதித்த சடாயு மனம் பொறுக்காமல் இராவணனோடு சண்டையிட்ட நிலையில் இராவணன் சிவபெருமான் அளித்த வாளால் சடாயுவின் இறகுகளை வெட்டி வீழ்த்தியதால் பறக்க முடியாத சடாயு தரையில் விழுந்து உயிருடன் கிடந்தான்.

சீதையைத் தேடி வந்த இராம இலக்குவர்க்கு இராவணன் நிலையுணர்த்தி இறந்தபோது இராமபிரான் ஐயறிவுடைய சடாயுவிற்குத் தன் தந்தை தசரதனுக்குச் செய்ய முடியாத ஈமக்கிரியை செய்து சடாயுவின் உயிரைப் பரமபதத்திற்கும் அவன்தன் பூத உடலை மண், நீர், நெருப்பு, காற்று. விண் எனும் ஐம்பூதத்திலும் ஐக்கியப் படுத்தியும் காரியப் படுத்தியதால் அந்தப் புள் (சடாயு) திரு என்னும் அடைமொழிப் பேறு பெற்றது. இந்த வைபவத்தைக் காப்பியக் கவிஞர் சிலாகித்துக் கூறுகையில்,

**மறங்கொண்ட இராவணனார் மதிகெட்டுச் சீதையினைச்**
**சிறை எடுத்த போதன்று சிலிர்த்தெழுந்த கழுகரசை**
**அறுத்துச் சிறகொடித்த அந்நாளில் பூதவுடல்**
**இருபுள்ளம் பூதங் குடியிதனைச் சேவியுமே!**

என்றார்,

இந்நிகழ்வால், இராமாநுசர், திருக்குலத்தார் என்னும் ஆதிதிராவிட அரிசனச் சீடர்களோடு ஸ்ரீரங்கத்தில் காவிரியில் குளித்து விட்டு வரும்போது பிராமணர்கள் வெறுத்த நிலையில் இராமரே ஐயறிவுடைய சடாயுவுக்குத் திருவருள் புரிந்தபோது பாகவத இலக்கணமுடைய திருக்குலத்தாரை அரவணைத்தல் தீதோ! என்றார். எனினும் இராமாநுசரை ஏற்கப் பிராமணர்கள் இசையாவிட்டாலும் ஸ்ரீரங்கநாதன் திருக்குலத்தார்களை ஏற்று அருள்பாலித்தான் என்பது திருவரங்க வைபவமாகும், இத்தகு திருப்புள்ளம் பூதங்குடியானது சடாயு அடைந்த மோட்சத்தால் ஒரு தத்துவத்தைத் தந்த தலமாக

உணரச் செய்தது என்றால் மிகையில்லை, அத்தத்துவந்தான் ஆதரவற்றவரின் மரணத்திற்கு ஆண்டவன் தானே புத்திர ஸ்தானத்திலிருந்து இறுதிக்கடன் செய்தான் என்பதாகும்.

இதனால் மேலும் ஒரு தத்துவம் கிளைப்பதையும் உணர முடிகிறது, ஸ்ரீமன் நாராயணனின் திவ்யதேசம் 108 போல அவனின் மகிமைகளையும் 108 ஆகக் கூறுவர், அவைகளுள் தானே தனக்காகப் பலவடிவம் எடுத்துக் கொண்டு சாளக்கிராமமாய் ஆதல் என்ற அவதாரமும் ஒன்றாகும், ஈண்டுப் புள்ளம் பூதங்குடியில்தானே புத்திரஸ்தான வடிவம் கொண்டது தான் சாளக்கிரமமாகும், சாளக் கிரமம் என்றால் திருமால் உருவமாகவே பூசிப்பதற்குரிய ஒன்று என்பது பொருள், அதுதான் சுயம்பான சொரூபம், எனவே இத்தகு சிறப்பெல்லாம் ஒருசேர உடையது திருப்புள்ளம் பூதங்குடி.

திருமங்கை பா சுரத்தில் தினம் களிக்கும் மனமுடையான் எனக் கவிஞர் (11) பாடியதற்கேற்பத் திருமங்கையாழ்வாரின் பா சுரமானது அரக்கர் தலைவன் தோள் ஐந்நான்கும் துணித்த வல்வில் இராமனிடம் புள்ளம் பூதங் குடிதானே (11) என இயற்கை சூழ்நத ஊராகப் புகழ்ந்துள்ளது.

திருப்புள்ளம் பூதங்குடியில் உள்ள மூலவர் வல்வில் இராமன் என்ற பெயர் உடையவராயினும் சடாயுவைக் கொன்ற இராவணனுக்காகவே கையில் வில்லேந்தியவராய்க் காட்சியளிக்கிறார் என்பது கருத்து, ஒவ்வொரு கடவுளர்க்கும் ஒவ்வொரு அடையாளம் உண்டு, அவ்வாறே இராமன் ஓர் இல், ஒருசொல், ஒருவில் என்ற தத்துவத்திற்கு இலக்கானவன் என்பதால் இராமனை வில்லில்லாமல் கண்டு வழிபடலாகாது என்ற படிக் காப்பியக் கவிஞர்வல்வில் இராமனுடன் வயங்கும் புள்ளம் பதி(2) என்றார்.

இங்ஙனம் வல்வில் இராமனைத் தரிசிக்க வைத்த கவிஞர், சுவாமிமலைக்குப் பக்கமான திருஆதனூரில் ரங்கநாயகித் தாயாரோடு ஆண்டளக்கும் ஐயன் என்ற பேருடைய பரந்தாமனைக் காட்டிப் பரவசமூட்டுகிறார். திருமங்கை மன்னரின் மங்களா சாசனம் பெற்ற தலம். இங்குள்ள மூலவர் கிழக்கு நோக்கிய திருமுகச் சேவையில் தலையின் கீழ் மரக்காலும் இடது கையில் ஓலையும் எழுத்தாணியும் கொண்டவராய், புயங்க சயனத்தில் காட்சி தருகிறார்.

பாடுவார் பசிதீர்ப்பாய் எனச் சைவத்தில் சுந்தரர் கூறுவது போலப் பக்தர்களான பாகவதர்களுக்குப் படியளக்க மரக்காலும் ஆன்மாக்களின் செய்கைகளுக்கேற்ப வினை தர்மத் தீர்ப்புகளை எழுதித் திருவருள் புரியும் அற்புத ஐயனாக ஆதனூரில் தத்துவமாகப் பரந்தாமன் உள்ளதைக் கவிஞர் காட்டுகின்றார், ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை எனத் திருமங்கை மன்னராம் ஆழ்வார் தம் பெரிய திருமடலில் (130) குறிக்கிறார். இச்சிறப்பு காரணமாகவே திரு ஆதனூர் விண்ணகரத்துக் (கோயிலில்) கோபுரத்தில் திருமங்கையாரின் திருவுருவச்சுதை வடித்தை ஆன்றோர் வடித்துக் காட்டியுள்ளார்கள்.

ஆதன் என்றாலே ஆக்களைத் தனதாகக் காப்பவன் என்பதற்கேற்பத் திருஆதன் என்ற அடைமொழிச் சிறப்பால் காமதேனுவாம் பசுவைக் காப்பவன் என்பது சிறப்புக் கருத்தாகும்.

திருஆதனூர் வைபவத்தைக் காப்பியக் கவிஞர் சிறப்பிக்கையில் மதில் கட்டும் திருமங்கை மன்னனுக்குப் பொருள் கொடுக்க (3) என்றதொரு வரலாற்றைக் கூறுவது சிந்தனைக்குரியதாகிறது, ஏனெனில் புள்ளம் பூதங்குடியில் திருமங்கை பா சுரத்தில் தினம் களிக்கும் மனமுடையான் (4) என்ற போது திருமங்கையாழ்வார் என நினைக்கச் செய்த கவிஞர் மீனவர் இந்த ஆதனூர்ப் பாசுரத்தில் திருமங்கை மன்னன் என்றது ஏதோ ஒரு வேற்றுமைக் குறிப்பை உணர்த்துவதாகவே உள்ளது.

ஆழ்வார் என்ற நிலையில் மட்டுமாய்த் திருமங்கையார் இல்லை, சோழ மண்டலத்தின் ஒரு பகுதியாக இருந்த திரு ஆலி நாடு என்றதில் சோழ வேந்தனின் சேனைத்தலைவராய் இருந்த நீலனின் மகன் கலியன் என்ற பெயருடையவரே பின்னாளில் திருமங்கை எனப்பெயர் பெற்றார். தந்தைக்குப் பின் சேனைத் தலைமை பெற்றதால் மன்னனுக்குரிய மதிப்பும் ஏற்பட்டதால் திருமங்கை மன்னரானார், எனினும் ஆன்மீக நாட்டமுடையவராய்த் தம் கைப் பொருள் அனைத்தையும் பாகவதர்கட்கே செலவழித்தார். பொருள் முட்டுப்பாடு வந்த போது ஓம் (1) நமோ(2) நாராயணாய(5) என்ற எட்டெழுத்து மந்திரத்தைச் சொல்லி வழிப்பறியால் பெற்ற செல்வத்தையும்

நாராயணன் கைங்கரியத்திற்கே அர்ப்பணம் செய்தார். இருப்பினும் நாராயணனுக்கே சேஷப்பட்டிருந்ததால் (அடிமைப்பட்டிருந்ததால்) திருவரங்கத் திருப்பணி செய்தார். திருவரங்கனுக்கு விமானம், மண்டபம், கோபுரம், மதில் முதலியவற்றைக் கட்டியதாகக் குருபரம்பரை எனும் நூல் திருமங்கை மன்னரின் கைங்கரியத்தை வானளாவப் புகழ்கிறது, ஆக, கவிஞர் வாக்கு பொய்யாது என்றபடியே மீனவர் மதில் காட்டும் திருமங்கை மன்னனுக்குப் பொருள் வந்ததாகத் தம் பாடலில் கூறினார் எனலாம்.

மேலும் இந்த ஆதனூர்ப் பா சுரத்தில் மீனவர் ரெங்க நாயகியான பார்க்கவியாள் எனப்புதுப் பொலிவான பேரிட்டு வணங்குவது சிந்தனைக்கு விருந்தாக உள்ளது. பார்முழுவதும் வதியும் சக்தியாக உள்ளதால் பரம சிவனின் மனைவி பார்வதி (பார் – உலகம்) எனப் பட்டது போல வைணவத்தில் பிருகு முனிவரின் தவத்தால் அவதரித்த இலட்சுமிக்குப் பார்க்கவி என்று பெயர், பார்முழுவதும் கவிந்து (சூழ்ந்து) இருப்பதால் திருமகள் என்ற குறிப்பில் பார்கவி என்பதே பார்க்கவி ஆவாள். இவளே பூலோக வைகுந்தம் எனப்படும் திருவரங்க நாயகி எனப்படுபவள் ஆவாள்.

இப்படி ஆதனூரில் ஆரா அமுதனைக் காட்டிய கவிஞர் இனி அடுத்துத் திருக்குடந்தையாம் கும்பகோணத்து ஆரா அமுதனை அனுபவிக்கச் செய்வதைக் காண்போமாக.

**15.08.2020** அன்று நடைபெற்ற நூல் வெளியீட்டு விழாவில் வெளியிடப் பெற்ற **கண்ணே மணியே முத்தம் தா** என்னும் நூல் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, ஆங்கிலத்துறைத் தலைவர் பேராசிரியர். **ந.ப. மாணிக்கம்** அவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட நூல்.

– *பதிப்பாசிரியர்*



# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள் TALES AND PARABLES என்ற ஆங்கில நூலிலிருந்து தமிழில்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

6

ஒரு மனிதனுக்குச் சுருட்டு பிடிக்கும் பழக்கம் இருந்தது. ஒரு நாள் இரவில் சுருட்டு பிடிக்க வேண்டும் என்று விரும்பினான். அடடே, இரவு நேரமாகிவிட்டதே இப்பொழுது போய் யாரிடம் பற்ற வைக்க நெருப்பு வேண்டும் என்று கேட்பது? என்று தயங்கித் தயங்கி நெடுநேரம் யோசித்தான்; இரவு நடுநிசி ஆகிவிட்டதே என்று நினைத்தான். பாதகமில்லை, பக்கத்து வீட்டுக்காரனை எழுப்பி, சுருட்டு பற்ற வைக்க வேண்டும், கொஞ்சம் நெருப்பு வேண்டும் என்று கேட்டுப் பார்க்கலாம் என்று முடிவு செய்தான். அப்படியே செய்யலாம் என்று கருதி வீட்டில் இருந்த ஒரு விளக்கை ஏற்றிக் கையில் வைத்துக் கொண்டு பக்கத்து வீட்டுக் காரனின் வீட்டுக் கதவைத் தட்டி அவனை எழுப்பினான். பக்கத்து வீட்டுக்காரனும் கதவைத் திறந்து நடு இரவு நேரம், என்ன விஷயம் என்ன அவசரம் என்று கேட்டான். அதற்கு இவன் ஒன்றுமில்லை, நான் அடிக்கடி சுருட்டு பிடிக்கிறவன் என்று உனக்குத்தான் தெரியுமே, சுருட்டு பற்ற வைத்துக் கொள்ளக் கொஞ்சம் நெருப்பு வேண்டும், அதற்காகத்தான் என்றான்.

அந்த எதிர்வீட்டுக்காரன் இவனைப் பார்த்து நகைத்தபடி நீ தான் உன்கையில் ஒரு விளக்கை ஏந்திக் கொண்டுதானே என் வீட்டுக்கு வந்திருக்கிறாய்; உன் கையில்தான் நெருப்பு இருக்கிறதே, அதில் பற்ற வைத்துக் கொள்ளலாமே என்றான். அப்பொழுது தான் தனக்குத் தேவைப்படும் நெருப்பு தன்னிடமே இருக்கிறது என்று இவனுக்குப் புரிந்தது.

7

பரமஹம்சர் தங்கி இருந்த இடத்திற்கு ஒரு சீடன் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தான். அவன் மிகவும் பணிவானவனாகவும், எளிமையானவனாகவும் காணப்பட்டான். சிறிது காலம் அவன்

அந்தப்பக்கம் வரவே இல்லை; எங்கே போனான், என்ன ஆனான் என்றும் தெரியவில்லை; ஒருமுறை பரமஹம்சரும் சீடர்கள் சிலரும் தட்சிணேஸ்வரம் அருகில் இருந்த ஒரு கிராமத்துக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தனர். அப்போது அந்தச் சீடனும், இன்னும் சில இளைஞர்களும் கங்கை நதியின் ஒரு பாலத்துச் சுவர்மீது உட்கார்ந்து உரக்கப் பேசி அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். பரமஹம்சரைப் பார்த்ததும், சிறிதும் மரியாதை இல்லாமல் மிகவும் சாதாரணமாக, என்ன பூசாரி சௌக்கியமா? என்று கேட்டான்; பரமஹம்சர் எதுவும் பேசவில்லை; பரமஹம்சரும் சீடர்களும் அந்த இடத்தைக் கடந்து வந்துவிட்டனர். அந்தப் பழைய சீடன் மரியாதை இல்லாமல் பேசியது பரமஹம்சருடன் வந்து கொண்டிருந்த சீடர்களின் மனத்தை வருத்திவிட்டது. எனவே, பரமஹம்சரிடம் மஹராஜ், யார் அவன்? கொஞ்சம் கூட மரியாதை இல்லாமல் பேசுகிறானே! என்றார்கள்.

சிறிது முறுவலித்தவாறு, பரமஹம்சர் சொன்னார்; அவனை மறந்து விட்டீர்களா, ரொம்ப நாள் முன்னர் அவன் அடிக்கடி ஆஸ்ரமத்துக்கு வந்து போய்க் கொண்டிருந்தான்; அதன் பிறகு வரவே இல்லை; ஆளையே காணவில்லை; எங்கேயோ போய்க் கொஞ்சம் காசு பணம் சம்பாதித்திருப்பான்; அந்தப் பணத்தை மடியில் கட்டி வைத்துக் கொண்டிருப்பான்; அந்தப் பணம் பேசுகிறது! அவனா பேசுகிறான்! என்றார்.

8

கடவுளும் குழந்தையும் பல வேளைகளில் ஒரே மாதிரி இருப்பார்கள். ஒரு குழந்தை தன்மடி நிறைய மிட்டாய்களை வைத்தபடி உட்கார்ந்திருந்தது. வழியில் போவோர், வருவோர் எல்லாரும் கொஞ்சம் கொடு, கொடு என்று கேட்டுக் கேட்டுப் பார்த்தார்கள்; குழந்தை கொடுக்க மறுத்து விட்டது. மடியில் வைத்துக் கொண்டு சும்மா இருந்தது. ஒரு முறை அந்த வழியில் ஓர் ஆள்வந்தான்; அவன் குழந்தையிடம் எதுவும் கேட்கவில்லை; வந்த வழியில் சும்மா போய்க்கொண்டே இருந்தான்; குழந்தை அவனிடம் ஓடிச் சென்றது; அய்யா, பிடியுங்கள், மிட்டாய் வாங்கிக் கொள்ளுங்கள் என்றது. கடவுளும் இப்படித்தான்; வேண்டாமலே முழுதும் தருபவன் அவன்.

# ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

## 2. திருக்கோழிஎன்னும் உறையூர்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்யதேசங்களுள் இரண்டாவது திவ்யதேசம், உறையூர் என்னும் திருக்கோழி, சோழநாட்டுத் திருப்பதிகளில் இது இரண்டாவது தலமாகும். திருக்கோழியூர், நிகளாபுரி, உறந்தை என்று குறிப்பிடப்பட்ட இத்தலம் தற்காலத்தில் உறையூர் என்று அழைக்கப்படுகின்றது. ஸ்ரீ மகா லெஷ்மிநிரந்தரமாக உறையும் ஊர். ஆதலால் உறையூர் ஆயிற்று.

ஒருகாலத்தில் சோழர்களின் தலைநகராக இருந்த இந்த உறையூரில் தர்மவர்ம சோழன் வம்சத்தில் பிறந்தநந்த சோழன் என்னும் மன்னன் இருந்தார். அவர் திருவரங்கனுக்குத் தொண்டு செய்வதில் மிகவும் ஆர்வம் கொண்டவர். அவருக்குப்புத்திரப் பேறில்லாக்கவலை மட்டும் தான். பெருமாள் வைகுண்டத்தில் இலட்சுமி தேவியைக் கடைக்கண்ணால் நோக்கி நந்தசோழனுக்கு புத்திரியாகுமாறு அருளினார். தாயாரும் பங்குனிமாதத்தில் ஆயில்ய நட்சத்திரத்தன்று தாமரை ஓடையில் தாமரைப் பூவில் குழந்தையாக அவதரித்தார். உறையூரில் நந்தசோழன் வேட்டைக்குச் சென்ற பொழுது, அம்மகவைக் கண்டெடுத்து, கமலம் எனப்படும் தாமரை மலரில் கண்டெடுத்ததால் கமலவல்லி எனப் பெயரிட்டு அன்போடு வளர்த்துவந்தார். நாளொருமேனியும் பொழுது தொருவண்ணமுமாக வளர்ந்த கமலவல்லி திருமணப் பருவம் எய்தினார்.

ஒரு நாள் நம் ரங்கநாதர் குதிரைமீதேறி பலாசவனத்தில் வேட்டைக்கு வந்ததுபோல் உலாவருகிறார். அப்பக்கம் தோழிமாருடன் கமலவல்லிவர, தன் பேரழகு முழுவதையும் கமலவல்லிக்குக் காட்டிமறைகிறார் எம்பெருமான். காதல் மோகத்திலும், பக்திவெள்ளத்திலும் கலங்குகிறாள் கமலவல்லி.

மகளின் நிலைகண்டுமன்னன் திகைக்கின்றான். அவர்கனவில் வந்தபெருமான் பிள்ளைப் பேறில்லாநின் குறையைத் தீர்க்கவே யாம் திருமகளை அனுப்பினோம்; என் சன்னதிக்கு அழைத்துவா, ஏற்றுக்கொள்கிறேன் என்று கூறினார். இதனால் அம்மன்னன்

கமலவல்லியை திருமணக் கோலத்தில் திருவரங்கம் அழைத்துவர, கோவிலின் உள்நுழைந்ததும், கமலவல்லி அரங்கனோடு இரண்டறக் கலந்தாள்.

இக்காட்சியைக் கண்டுமன்னன் நந்தசோழன் மிகவும் மகிழ்வுற்று, உறையூர் வந்து கமலவல்லி அழகிய மணவாளன் நினைவாகமாபெரும் கோவில் ஒன்றை எழுப்பினார்.

ரங்கநாதரே அழகொழுகும் மாப்பிள்ளையாக வந்து திருமணம் செய்து கொண்டதால், அவர் அழகிய மணவாளர் ஆனார்.

இந்நிகழ்ச்சி துவாபரயுகத்தின் முடிவில் நடைபெற்றதாகும். கலியுகத்தில் ஒருசமயம் இந்த உறையூரில் மண்மாரிபெய்துபட்டணம் முழுகிப்போனது. பின் சோழ மன்னர்கள் கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். அப்பொழுது ஒரு சோழமன்னன் அழகிய மணவாளனையும் கமலவல்லித் தாயாரையும் பிரதிஷ்டை செய்து கட்டிய கோயிலைத் தான் இப்பொழுது நாம் காண்கிறோம். கோயில் கோபுரம் 5 நிலை உடையது.

இங்குள்ள மூலவர் பெயர் : அழகிய மணவாளர்
தாயார் : கமலவல்லித் தாயார்
தீர்த்தம் : சூர்ய புஷ்கரணி, கல்யாண தீர்த்தம்
விமானம் : கல்யாணவிமானம்
கோலம் : நின்றதிருக்கோலம்

கமலவல்லியாக லெட்சுமி தேவியே இக்கோவில் இருக்கும் தலத்தில் பிறந்த காரணத்தால் இக்கோவிலுக்கு நாச்சியார் கோவில் என்றொருபெயருண்டு. இத்தலம் தாயாரின் பிறந்ததலம் என்பதால் இவளே இங்குபிரதானமாக இருக்கிறாள். இங்கு தாயார் மட்டுமே உற்சவராக இருக்கிறார்.

பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான திருப்பாணாழ்வார் அவதரித்த ஊர் உறையூராகும். இக்கோவிலில் இவர் தனிச்சன்னதியில் இருக்கிறார். பொதுவாக மார்கழி மாத வைகுண்ட ஏகாதசியன்று, பெருமாள் சொர்க்கவாசலைக் கடந்துவரும் வைபவம் வைணவத் தலங்களில் நடைபெறும். இதிலிருந்து மாறுபட்டு, உறையூரில் தாயார்

சொர்க்கவாசல் கடக்கும் நிகழ்ச்சி, தை அல்லது மாசி மாதத் தேய்பிறை ஏகாதசியில் சொர்க்கவாசல் திறக்கப்பட்டு, தாயார்மட்டுமே பரமபதவாசலைக் கடந்துவருவார். திருமணத்தடை உள்ளவர்கள் ஆயில்ய நட்சத்திரத்தன்று தாயாருக்கு அர்ச்சனை செய்து வழிபட்டால், திருமணம் நிச்சயமாகும்.

பொதுவாக, பெருமாள் தலங்களில் குங்குமப் பிரசாதம் தருகின்றனர். ஆனால் இங்குசந்தனப் பிரசாதம் வழங்குகின்றனர். இவளுக்குப் படைக்கப்படும் நைவேத்தியத்தில் காரத்துக்காகமிளகாய் வற்றல் சேர்க்காமல் மிளகு சேர்க்கப்படுகிறது. திருச்சி மத்திய பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 3 கி.மீ தொலைவில் உள்ளது. என் அய்யா நா. மீனவனார் பரந்தாமன் பாமாலை என்ற நூலில் திருக்கோழி குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் :

1. ஸ்ரீரங்கத்தில் நடக்கும் பங்குனி விழாவின் போது, உற்சவர் நம்பெருமாள், ஆறாம் நாள் விழாவில், தாயார் அவதரித்த ஆயில்ய நட்சத்திரத்தன்று, அதிகாலையில் பல்லக்கில் காவிரிக் கரையில் உள்ள அம்மா மண்டபம், காவிரி, குடமுருட்டி நதிகளைக் கடந்து இக்கோயிலுக்கு வருகிறார். வழிநெடுகிலும் பக்தர்கள் வாழைமரங்கள் கட்டி, வாசலில் கோலம் போட்டு மணமகனுக்கு வரவேற்புக் கொடுக்கின்றனர். கோயிலுக்கு வரும் சுவாமி, மூலஸ்தானம் எதிரேநின்று தாயாரை அழைக்கிறார். பின்பு பிரகாரத்தில் உள்ள சேர்த்தி மண்டபத்திற்குச் செல்கிறார். பின் தாயாரும் சேர்த்தி மண்டபத்திற்குச் சென்று சுவாமியுடன் மூலஸ்தானத்திற்குத் திரும்ப, சுவாமி மீண்டும் ஸ்ரீரங்கம் செல்கிறார். பங்குனி உத்திரத்தன்று இவர் ஸ்ரீரங்கத்தில் ரங்கநாயகித் தாயாருடன் சேர்த்தியாகக் காட்சிதருகிறார். இவ்வாறு பங்குனி விழாவில், இரண்டு தாயார்களுடன் சேர்த்துக் காட்சி தருகிறார்.

இவ்வாறு உறையூரில், அழகிய மணவாளப் பெருமாளும், கமலவல்லித் தாயாரும் திருமணக் கோலத்தில் நின்றபடி காட்சி தருகின்றனர். இக்கோயிலில் தாயாருக்கென்று தனிச்சன்னதி

இல்லை. ரங்கநாதரே தாயாரை மணந்து கொண்டதால், இங்குசுவாமி, தாயார் இருவரும் அவரைப் பார்த்தபடி வடதிசை நோக்கியிருக்கின்றனர். பெருமாள் சக்கரத்தைப் பிரயோகிக்கும் நிலையில் இருக்கும் திருக்கோலத்தைக் கண்டுபணிந்து தொழ, அமுதம் உண்ட தேவர்களும் வருகைதரும் பேரழகு வாய்ந்த ஊரே உறையூர் எனக் கூறும் முதல் பாடல் :

*கமலவல்லி உடனிருக்கக் காட்சிதரும் திருக்கோலம்*
*நமக்கென்றே இருந்தருளும் நாயகன்வாழ் திருக்கோழி*
*எமையாளும் எந்தையென இன்னமுதம் தானுண்ட*
*இமையவரும் வந்துபணி எழில் ஊரும் உறையூரே*

2. பிள்ளையில்லா மன்னனுக்குத் திருமகளைப் பெண்ணாக்கி, பின் அவளையே மணந்து திருக்கோழியில் வந்தமர்ந்த பெருமான் சேவடிகளைத் தொழுபவர் பெரும் பேற்றை அடைந்தே தீருவர் எனக் கூறும் இரண்டாம் பாடல் :

*பிள்ளையிலா மன்னனுக்குத் திருமகளைப் பெண்ணாக்கிக்*
*கொள்ளை அழகுடைய குமரியவள் தனைமணந்த*
*வள்ளல் திருக்கோழி வந்தமர்ந்தான் சேவடிகள்*
*உள்ளுவார் பெரும் பேற்றை உரைக்கவல்லார் யாருளரே*

3. உறையூரை ஆண்ட ஆதித்த சோழன் தன் பட்டத்துயானையின் மீது வரும்போது, வில்வமரத்தின் நிழலில் மறைந்திருந்த சிவன் இவ்வூரின் பெருமையை அவனுக்கு உணர்த்த எண்ணி, அம்மரத்தின் கீழ் மேய்ந்து கொண்டிருந்த கோழியை நோக்க, அது உக்கிரம் கொண்டு யானையை எதிர்த்துயுத்தம் செய்து, தனதுகால் நகங்களினாலும் அலகினாலும் கொத்திக் குதறியானையின் கண்களைக் குருடாக்கிப்புற முதுகிட்டு ஓடச் செய்தது. அதனால் இவ்வூருக்குக் கோழியூர் என்ற பெயருண்டாகிப் பின் திருக்கோழியாயிற்று. கோழியின் பேரைக் கொண்ட உறையூரில் உறைந்திருக்ம் பெருமாளை வணங்குபவர் செல்வத்துடன் பெருவாழ்வும் நலமும் பெறுவர் என்று கூறும் மூன்றாம் பாடல் :

*பெருவேழம் தனைஎதிர்த்துப் பேராண்மை வலிகாட்டும்*
*ஒருகோழிதன் பேரை உவந்தேற்ற உறையூராம்*
*திருநகரை வணங்கிடுவார் திருவுடனே நலம் பெறுவார்*
*பெருவாழ்வும் தான்பெறுவார் பேரடிகள் வணங்குதுமே*

4. திருமகளைத் தன் மார்பில் கொண்டு, துளவத்தைத் தன் மார்பில் அணிந்த பெருமாள், மாயக் கண்ணனாகி, குறும்புகள் செய்வதில் தீராதவிளையாட்டுப் பிள்ளையாக இருந்ததால் யசோதை கிருஷ்ணரின் இடுப்பிலே ஒரு கயிற்றைக் கட்டி, ஓர் உரலிலே அக்கயிற்றைப் பிணைத்துவிட்டு, தனது வேலைகளில் ஈடுபட்டாள். குழந்தை கண்ணன் அந்த உரலை இழுத்துக் கொண்டு, அங்கேயிருந்த இரட்டை உரலோடு புகுந்து, மரத்தைப் பிளந்தான். மற்றொரு அவதாரமான அவதாரத்தில், மகாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடிமண் கேட்டு, குள்ளமான உருவத்தை மிகப் பெரிய உருவமாக மாற்றி, முதலடியில் பூமியையும், இரண்டாம் அடியில் வானத்தையும் மூன்றாம் அடியில் மகாபலிதலையில் காலை வைத்து, மகாபலியைப் பாதாள உலகத்தில் அரசாட்சி செய்யப் பணித்தார். இத்தகைய பெருமைகள் உடைய பெருமானைத் தினம் வணங்கிப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

*திருவுடையமார்பன் திகழ்கோழியூர் உறைவான்*
*மருவுடைய துளவத்தார் மகிழ்ந்தணியும் மாமாயன்*
*மருதிடையில் புகுந்தன்றுமரம் பிளந்தான் மூவுலகும்*
*திருவடியால் அளந்தவனைத் தினம்வணங்கிப் போற்றுதுமே.*

5. கடலைப் படையாகக் கொண்ட அழகிய மணவாளன், கோழியூரில் வாழும் கோவிந்தன், அவனது திருநாமத்தைத் துதித்து, அவனது அடிமலர்களைப் போற்றுவோர் உலகில் நலம் பெறுவர் எனக் கூறும் ஐந்தாம் பாடல் :

*ஆழிப் படையுடையான் அழகியநல் மணவாளன்*
*கோழியூர் வாழும் ஒரு கோவிந்தன் திருநாமம்*

*வாழிஎன வாழ்த்துவார்வையகத்தே நலம் பெறுவார்*

*ஆழநெடுங் கடலுறைவான் அடிமலர்கள் போற்றுதுமே.*

இந்த அழகிய மணவாளர் கோவில் திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றகோவில் ஆகும்.

**திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :**

*கோழியும் கடலும் கோயில் கொண்ட*

*கோவலரே யொப்பர் குன்றமன்ன*

*பாழியும் தோழுமோர் நான்குடையர்*

*பண்டிவர்தம்மையுங் கண்டறியோம்*

*வாழிய ரோவிவர் வண்ணமென்னில்*

*மாகடல் போன்றுளர் கையில் வெய்ய*

*ஆழியொன் றேந்தியோர் சங்குபற்றி*

*அச்சோ ஒருவர் அழகியவா*

## குழந்தைப் பாடல்களில் நாட்டுப் பற்று

**முனைவர் தேவி நாச்சியப்பன்**

குழந்தைகள் உள்ளத்தில் நாட்டுப்பற்றை ஊட்ட வேண்டும். நமது பாரதத் திருநாடு, தமிழ்நாடு ஆகியவற்றின் அருமை பெருமைகளைக் குழந்தைகளுக்குப் பாடல் வழி சொல்லலாம். அதற்கான பல பாடல்களைக் கவிஞர் பெருமக்கள் பாடியுள்ளனர்.

*இந்திய நாடு நம்நாடு*

*இயற்கை வளமிகு பொன்னாடு*

*முந்தைய பழமைத் திருநாடு*

*முன்னோர் புகழின் பெருநாடு*

*சிந்து கங்கை கோதாவரி*

*திகழும் யமுனை சீர்காவிரி*

*வந்து தழுவும் இனியவளம்*

*வையம் போற்றும் புனித நிலம்*

*இமயப் பனிமலை குமரிமுனை*

*இருகடல் நடுவே நமதுரிமை*

*கமழும் பொழில்கள் வளவயல்கள்*
*கனிப்பொருள் தொழில்கள் நிலவுநிலம்*
*மொழிகள் மதங்கள் நிறைநாடு*
*மூச்சென ஒற்றுமை திகழ்நாடு*
*பலவகைக் கலைகள் பொன்னாடு.*
*பெருமைக் குரிய இந்நாட்டில்*
*பிறந்தோர் எவரும் இந்தியராம்*
*ஒருமைப் பாட்டை வளர்ப்பதுவே*
*ஒவ்வொரு வருக்கும் தலைக்கடமை.*

என்று காப்பியக் கவிஞர் மீனவன் அவர்கள் பாடியுள்ளார். இந்திய நாட்டின் பழமை, புகழ், வளம், பெருமை என அனைத்தையும் ஒருமைப் பாட்டுணர்வுடன் குழந்தைகள் பாட ஏற்ற பாடல்.

தமிழ் வழங்கும் திருநாட்டின் பெருமை உணர்ந்து, பற்றுக் கொள்ளத்தக்க பாடல்கள் பலவற்றைக் குழந்தைப் பாடல்களாகத் தருகின்றனர் கவிஞர்கள்.

அரசி என்று போற்றப்பட்ட பேராசிரியர், கவிஞர் அர.சிங்கார வடிவேலன் அவர்கள் தமிழ்நாட்டைப் போற்றும் பாடல் இதோ,

*செந்தமிழ் வழங்கும் தமிழ்நாடு*
*சிறுவராம் எங்கள் தாய்நாடு*
*முந்நாள் அதனை ஆண்டவர்கள்*
*மூன்று தமிழும் வளர்த்தவர்கள்*
*சேரர் சோழர் பாண்டியர்கள்*
*செந்தமிழ் நாட்டை ஆண்டவர்கள்*
*வீரம் காட்டும் வில்லோடு*
*வேங்கை மீனும் அடையாளம்*
*பனம்பூ அத்தி வேப்பம்பூ*
*பண்டை வேந்தர் யாரென்றே*
*இனங்கள் காட்டும் மாலைகளாம்*
*எங்கும் மணக்கும் சோலைகளாம்*
*இன்று கோயில் கோபுரமே*
*எங்கள் அரசின் இலச்சினையாம்*
*என்றும் என்றும் மேலோங்கி*
*எங்கள் நாடு வாழியவே!*

தமிழ்நாட்டின் மூவேந்தர், முத்தமிழ், வீரம், வளம் அனைத்தையும் பாடி மகிழும் குழந்தைகள், தமிழகம் மேலோங்கி வாழ வேண்டும் என்று போற்றுவதாகப் பாடியுள்ளார் கவிஞர்.

தேசிய விழாக்களான விடுதலை நாள், குடியரசு நாள், ஆசிரியர் தினம், குழந்தைகள் தினம், தொழிலாளர் தினம் போன்றவற்றைக் கொண்டாடி வருகிறோம். அந்த நாட்களின் மகத்துவத்தைப் பாடல் மூலமாகக் குழந்தைகளுக்குச் சொல்கின்றனர் கவிஞர்கள்.

கவியோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள், இந்திய சரித்திரக் கும்மி என்றொரு நூல் எழுதியுள்ளார். குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் சுதந்திரம் பிறந்த கதை என்ற நூலை எழுதியுள்ளார். இவ்விரு நூல்களும் குழந்தைகளுக்கு விடுதலைப் போராட்டம், ஆங்கிலேயர் அடக்குமுறை, இந்தியர்களின் தியாகம், வீரம் ஆகியவற்றைப் பாடல் வழி சொல்கின்றன.

விடுதலை நாள் விழாவில் பாடுவதற்கேற்ற பாடலைக் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா பாடியுள்ளார்.

*சொந்த மான நமது கொடியை*
*ஏற்றிடு வோமே - அதைச்*
*சுற்றி நின்று கூட்ட மாகப்*
*போற்றிடு வோமே*
*இந்த நாளே அடிமை வாழ்வு*
*தொலைந்த தென்றுநாம் - ஒன்றாய்*
*எங்கும் முரசு முழங்கக் கொடியை*
*ஏற்றிடு வோமே.*

சொந்தமான நமது கொடி, ஒன்றாய் முரசு முழக்கம், இவற்றைப் போற்றிப் பாடும் குழந்தைகளுக்கு நாட்டுப் பற்று ஏற்படும்.

*நம்மைநாமே ஆள்கின்ற நல்லரசை எய்தோம் அதை*
*நாட்டுகின்ற உரிமையினை இந்நாளில் செய்தோம்.*
........ ........ ........... .............. .......
*விளங்குகின்ற வாய்ப்புதனைப் பேணிடுவோம் இன்று பெருமை*
*விளங்குகின்ற குடியரசுப் பொன்னாளில் நன்று!*

என்று கவிஞர் க. அ. பிரகாசம் அவர்கள் பாடியுள்ளார். மக்களாட்சி மலர்ந்த நம் நாட்டில், உரிமைகளை உறுதி செய்து, கடமைகளைக் கண்ணாகப் போற்றிச் செயல்பட வேண்டியதைக் குடியரசு நாள் நினைவூட்டுகிறது.

உழைப்பாளர்களைப் போற்றும் உன்னதத் திருநாள் தொழிலாளர்தினம்.

*மே முதல்நாள் வந்தது*
*வெற்றி முழக்கம் தந்தது*
*தூ மழைபோல் வாழ்வளிக்கும்*
*தொழிலாளர் விழிப்படைந்திட*
*மே முதல்நாள் வந்தது.*

இக்கவிதை காப்பியக் கவிஞர் மீனவன் அவர்கள் எழுதியது. வாழ்வில் பல்வேறு பொருட்களைப் பயன்படுத்துகிறோம். அவை அனைத்தும் பல்வேறு மக்களின் உழைப்பால் உருவானவை. மழைபோல் பயன் கருதாது உழைக்கும் தொழிலாளர்களைப் பற்றிக் குழந்தைகள் தெரிந்து கொள்ள வேண்டும். உழைக்கும் மக்களை மதித்துப் போற்ற வேண்டும் என்ற உணர்வை ஏற்படுத்துகிறார் கவிஞர்.

தலைவர்களின் நாட்டுப்பற்றை நயமான பாடல்களாகப் பாடிக் குழந்தைகளை நல்வழிப் படுத்துகின்றனர் கவிஞர்கள். வாழ்ந்து காட்டிய சான்றோர்களையும், வழிகாட்டும் கவிஞர்களையும் பின்பற்றிக் குழந்தைகள் நாட்டுப் பற்று மிக்கோராய் வளருவர்.

## பக்தியில் கவசங்கள்

பேரா. முனைவர்.மு.வள்ளியம்மை,காரைக்குடி

தமிழ் இலக்கிய வரலாற்றின் இடைக்காலம் பக்தி இலக்கியக் காலமாகக் கருதப்பட்டது. பல்வேறு விதமான இலக்கியங்கள் இறைவனைப் பாடல் தலைவனாகக் கொண்டு படைக்கப்பட்டன. அவ்வகையில் கவசம் என்ற இலக்கியவகை காப்பு என்ற இலக்கியக் கூறில் இருந்து எழுந்தது எனலாம். அக்கவசமே பின்னர் மந்திரம் மற்றும் மாந்திரிகக் கலைகளுக்கும் ஊற்றுக் கண்ணாக விளங்கியது.

**கவசம் - அகராதிப் பொருள்:**

கவசம் என்பதற்கு இரும்பு முதலியவற்றால் செய்யப்பட்ட சட்டை,

காவல் செய்யும் மந்திரம், இரட்சை, இரட்சையை உண்டாக்கும் மந்திரம், காயத்திற்கிடும் கட்டு, காப்பு, மருந்துக் கவசம் என்பனபோன்று இன்னும் பல பொருட்களைக் கூறும் கழகத் தமிழ் அகராதி.

சென்னைப் பல்கலைக்கழக வெளியீடான லெக்சிகன் மெய்புகு கருவி, இரட்சை, இரட்சையை உண்டாக்குவதாய்ச் சுலோக ரூபமாயுள்ள மந்திர விசேடம், காயத்திற்கிடும் கட்டு என்று பொருள் பகர்கிறது. வீரமாமுனிவரின் சதுரகராதி சட்டை என்று இயம்புகிறது. சட்டைத் தோல் என இலக்கியச் சொல்லகராதி விளக்குகிறது. இதற்கான சரியான விளக்கமாக, போர்க்காலத்தில் ஒரு போராளிக்கு மெய்புகு சட்டை எவ்வாறு எதிரிகளின் தாக்குதலில் இருந்து அவன் உயிரையும் உடம்பையும் காக்கின்றதோ, அதே போன்று பிரபஞ்சத்தின் சீற்றத்திலிருந்தும் புவியியல் மாற்றத்தின் காரணமாக ஏற்படும் விபரீதங்களில் இருந்தும் அறிவியலின் விந்தைக் கண்டுபிடிப்புகளின் அழிவு செய்யும் ஆற்றலிலிருந்தும், மாந்திரீக விளையாட்டின் விபரீதங்களில் இருந்தும் முழுமையாகப் பக்தனின் உடம்பையும் உயிரையும் மனத்தையும் காத்தருள மெய்புகு சட்டையாக இறைவன் அமைய வேண்டும் என்ற வகையில் அமையும் இலக்கியமே கவசமாகும்.

இதன் பயனாகத் தனிவழிபாடு, கூட்டு வழிபாடு, ஆலய வழிபாடு, முன்னோர் வழிபாடு என வழிபாட்டு முறையில் பலவகையான பரிமாணங்கள் தோன்றிடவே உருவ வழிபாடு மேலும் விரிந்துபட்டுள்ளதைக் காணலாம்.

### காப்பும் தமிழும்

காப்பு என்பது சிற்றிலக்கிய வகையில் இலக்கியப் பிரிவாக இல்லை. ஆனால் காப்புப்பருவம் என்ற பெயரில் சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றான பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் முதற்பருவமாகத் திகழ்கிறது. ஏனைய இலக்கிய இலக்கண நூல்களில் காப்புச் செய்யுளாகவும் அமையப் பெற்றுள்ளதைக் காணலாம்.

தமிழகத்தில் பல்வேறு இடங்களில் குறிப்பாக அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, ஆசியவியல் ஆய்வு நிறுவனம் சென்னை, சரஸ்வதி மகால் தஞ்சை, திருவாவடுதுறை ஆதினம், தருமபுர ஆதினம் போன்ற

இடங்களில் பெரும்பாலான தெய்வங்கள் மீது சுலோகங்களாய்ப் பாடப்பெற்ற வடமொழிக் கவசச் சுவடிகள் காணப்படுகின்றன. அவை சிவக்கவசம், விஷ்ணு கவசம், ருத்ர கவசம், சக்தி கவசம், கஜமுக கவசம், வருண கவசம் என்பன.

தமிழில் இதுபோன்ற கவச நூல்கள் பல காணப்படுகின்றன. இவற்றில் ஒரு சில வடமொழியில் இருந்து மொழி ஆக்கம் செய்யப்பட்டவை. பெரும்பாலானவை வடமொழியைத் தமிழில் எழுத்துரு செய்யப்பட்டவை எனலாம். மிகச்சிலவே தமிழில் எழுந்த நூல்கள் எனலாம். அவ்வகையில் இவ்வகை இலக்கியத்திற்கு வித்திட்டவராக ஞான சம்பந்தப் பெருமானைக் கூறலாம். ஞான சம்பந்தர் தேவாரத்தின் கோளறு திருப்பதிகம் பிற்காலத்தில் தோன்றிய தேவராய சுவாமிகள் இயற்றிய கந்த சஷ்டி கவசம், பாம்பன் சுவாமிகள் இயற்றிய சண்முகக் கவசம், அருணகிரி நாதர் பாடியருளிய வகுப்புப் பாடல்கள் முதலியன தோன்றக் காரணமாயிற்று. இவை தமிழில் சிறந்து விளங்கும் கவச நூல்கள் மட்டுமல்லாது மக்களால் இன்றும் பெரிதும் போற்றப் படுவன ஆகும்.

**கவசநூல் கூறும் செய்தி:**

தற்காப்பு என்ற உணர்வு அனைத்து உயிர்களுக்கும் பொதுவான ஒன்று. ஆகவே, அவ்வகையில் இது மனித சமூகத்திற்கும் ஏற்புடைத்தே. ஆயினும் அச்சத்தின் மேலீட்டால் தனக்குள்ள தற்காப்பு உணர்விற்கு மேலும் உரம் சேர்க்கும் வண்ணம் இறைவன் துணையாக நிற்க வேண்டும் என்ற அமைப்பில் இந்நூலின் கண் சொற்கள் மந்திரங்கள் போன்று செயல்படுகின்றன.

தன்னை எவ்வெவற்றில் இருந்து காக்க வேண்டும் என்பதற்கு இந்நூல் சில பட்டியல் இடுகிறது. பகல், இருள், ஏமம், சாமம், போன்ற காலங்கள், வல்லபூதம் வலாட்டிகப் பேய்கள், அடங்காமுனி பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனி, கொள்ளிவாய் பேய்கள், குறளைப் பேய்கள், பெண்களைத் தொடரும் பிரம்ம இராக்கதர், அண்ணர் எனப்படும் தேவதைகள், இரிசி காட்டேரி என்னும் கண்டோர்க்குத் துன்பம் விளைவிக்கும் பூதக் கணங்கள், விட்டாங்காரர் மற்றும் பல பேய்கள், தண்டியக் காரர் எனப்படும் பூதப்பிசாசுகள் புடைசூழச் சிவிகையேறி வரும்படியான நிலையைப் பெற்ற பேய்கள்,

மற்றும் கிராமத்தின் நான்கு திக்கிற்கும் பாதுகாவலாய் விளங்கும் காளி போன்ற உக்கிரத் தெய்வங்கள் கொலைக் குணம் கொண்ட சண்டாளர் என்னும் பேய்கள் ஆகியவற்றிடம் இருந்தும், பூனைமயிர், பிள்ளைகள் என்பு, நகம், மயிர், நீள்முடி, மண்டை, பாவை, பலவகைக் கலசம் இவற்றைக் கொண்டு செய்யப்பட்ட மாந்திரிகப் பாவைகள், செப்புக் காசுகள், ஒரு பணம் (இரண்டரையணா) கொண்டு செய்யப்பட்ட பூதப் பிசாசுகளுக்கான காவுச் சோறும், பலவகையான அஞ்சனமும், மந்திரச் சடங்குகள் செய்யப்பட்டுப் பின்னர் ஒற்றையடிப் பாதையில் நடப்போர் மிதிக்கும் படியாக வீசப்பட்ட அரிசி மாவினால் செய்யப்பட்ட பாவைகளும் சிறு மட்கலயங்களும், வீட்டிற் குடியிருப்போர் அறியாத முறையில் எதிரிகளால் புதைக்கப்பட்ட பிள்ளைகள் என்பு மகளிரின் சிறுமுடி, நகக்கணுக்கள் போன்ற இடுபொருள்கள், உணவில் வஞ்சகமாகக் கலந்து தரப்பட்ட மருந்துப் பொருட்கள் ஆகியவற்றில் இருந்தும், புலி, பெருநரி, சிறுநரி, நாய், எலி, கரடி போன்ற விலங்குகளிடமிருந்தும், தேள், பாம்பு, செய்யான், பூரான் ஆகிய கொடிய நஞ்சினைக் கொண்ட ஊர்வனவற்றிடம் இருந்தும், ஒளிப்பு, சுளுக்கு, ஒரு தலைநோய், வாதம், சயித்தியம் (குடல்வியாதி) வலிப்பு, பித்தம், சூலை, சயம், குன்மம், சொக்கும்படியான சோர்வை ஏற்படுத்தும் சிரங்கு, கை, கால், மூட்டுவலியால் ஏற்படும் உளைச்சல், குடல் விப்பிரிதி (குடற்கட்டி) பக்கப் பிளவை (ஆற்றுப்புண்) எனப்படும் தன்னால் பார்க்க முடியாதபடி விலாப் பக்கத்தில் வரும் பெருங்கட்டிகள், படர்தொடை, வாழை என்ற விரைந்து உடம்பிற் பரவும் ஒருவகைத் தோல்நோய், காணாக்கடி, கரப்பான், குடைச்சலை அதிகப்படுத்தும் சிலந்தி, சீழ் பிடித்து இரணமாகக் காட்சி தரும் கண்ணேறினால் ஏற்படும் சிலந்தி, பல்லில் ஏற்படும் பற்குத்தரணை போன்ற நோய்கள், தொடையின் அரைப் பகுதியில் வரும் அரையாப்புக் கட்டிகள், எனப்பட்டவையால் இட்டு இவை போன்றவைகளில் இருந்து முழுமையாகக் காத்து அருள் பாலிக்க இறைவனை உடலின் கவசமாக இருக்க வேண்டும் என இவ்வகை நூல்கள் இயம்புகின்றன.

இவ்வகையான கவச நூல்களை உடல்குளித்துத் தெளிந்த மனத்தோடு ஒரு சிந்தனையாக ஒரு நாளைக்கு முப்பத்தாறு முறை உருச் செய்ய எண்ணியது எண்ணியபடி ஈடேறும் என்ற குறிப்பை அந்தந்த நூல்களின் பாடல்களிலேயே காணலாம்.

இவையன்றி ஈரேழு உலகமும் ஆண்,பெண், மண்ணாளும் அரசர், நவகோள்கள் ஆகிய அனைத்துப் பேரும் நல்ல நேயத்துடன் உறவாட அருள் பாலிக்க வேண்டும் என்றும் இறைவனிடம் பொதுக் கோரிக்கை வைக்கின்றன இக்கவச நூல்கள்.

**கவசமும் துதி நூல்களும்**

தமிழில் இறைவன் மீது பாடப்பட்ட நூல்கள் மூன்று வகையான அமைப்புகளில் இறைவனை அணுகியுள்ளன. முதல் நிலையாக இறைவனைப் போற்றுதல், இரண்டாம் நிலையில் தான் எடுத்துக் கொண்ட காரியத்திற்குத் துணையாக நின்று அப்பணி குற்றம் குறையில்லாது நிறைவேறத் தக்க அருளினை வேண்டுவது. மூன்றாவதாகப் பொதுவான பயம், நோய் பயம், மரணபயம் போன்றவை அணுகாமல் இருக்க உற்ற காவலனாக இறைவனை இருக்க வேண்டுவது.

கவச நூல்களில் இறைவனின் எந்த எந்த அவயங்கள் அல்லது சின்னங்கள் எவற்றை எவ்வகையில் எவ்வாறெல்லாம் காக்கும் எனச் சித்திரிக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

பிரணவ மந்திரமான ஓங்காரம் ஐந்தெழுத்து மந்திரமான நமசிவய என்ற பஞ்சாட்சரம், சரவணபவ என்ற ஆறெழுத்து மந்திரம், எட்டெழுத்து மந்திரமான நாராயணாய நமக என்று தமிழில் காணப்படும் புனிதமான இம்மந்திரங்களை ஒருவர் உருச் செய்ய, துன்பம் அணுகாது என்று நூல்கள் கூறுவது கொண்டு மந்திரங்களைக் கவசத்தின் சுருங்கிய வடிவமாகக் கொள்ளலாம்.

இன்றும் நடைமுறையில் நமது மக்கள் காப்புக்கட்டுதல் திருநீறு போடுதல், கயிறு போடுதல், தாயத்து போடுதல், திருஷ்டி கழித்தல்,விளக்கு ஏற்றி வணங்குதல், நோன்பு நோற்றல், நேர்த்திக் கடன் செய்தல், கடவுளர்களுக்குச் சேவல், ஆடு, மாடு, பன்றி, எருமை போன்ற விலங்குகளைப் பலியிட்டு வணங்குதல், முடி இறக்குதல், போன்ற பல்வகையான முறைகளில் தங்கள் வாழ்க்கைக்குரிய இறை கவசங்களை ஏற்படுத்திக் கொள்வதைக் காணலாம். தாங்கள் பலன் பெறுவதையும் உணர்கின்றனர்.

முதன்மைக் கடவுளர் முதல் கிராமத்து நாட்டுப் புறத் தெய்வங்கள் வரை உலகுக்குக் காப்பாக உள்ள பணியையே முதற்பணியாக ஏற்றுச் செயற்பட்டு வருவதாக வேதம், புராணம் போன்ற நூல்கள் பகர்கின்றன. இவை மண்ணுக்கும் மாசுக்கும் இரையாகாமல் கேலிக்கும் கிண்டலுக்கும் உரியதாகாமல் காத்துத் தரும் பொறுப்பு மக்களின் கடமையாகும்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### செங்கோன்மை

(அரசன் முறைமையின்கண் செம்மை)

1. **ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்**
   **தேர்ந்துசெய் வஃதே முறை.**

ஓர்ந்து - ஆராய்ந்து; கண்ணோடாது - ஒருபால் இரக்கம் காட்டாமல்; இறைபுரிந்து - அரசன் நடுவு நிலையோடு; யார்மாட்டும் - எவரிடத்தும்; தேர்ந்து - முறைகூறும் நூல்களோடு தெளிந்து; செய்வஃதே முறை - முறை செய்வதே அரசனுக்குரிய முறையாகும்.

எவராயினும் இரக்கம் காட்டாமல் ஆராய்ந்து நூல்களோடு தெளிந்து அரசமுறையைச் செய்வதே அரசனுக்குரிய ஆட்சிமுறையாகும்.

ஓர்ந்து, தேர்ந்து - வினை எச்சங்கள், யார்மாட்டும் - முற்றும்மை.

2. **வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்**
   **கோல்நோக்கி வாழும் குடி.**

வான்நோக்கி - மழையை எதிர்நோக்கி; வாழும் உலகுஎல்லாம் - உலகத்து வாழ்வார் எல்லாரும்; மன்னவன் கோல்நோக்கி - ஆளும் மன்னனின் செங்கோல் முறைமையை நோக்கி; வாழும் குடி - குடிமக்கள் வாழ்வார்கள்.

உலகத்து வாழ்பவர்கள் எல்லோரும் மழையை எதிர்நோக்கி வாழ்வார்கள்; எனினும் ஆளும் மன்னனின் செங்கோல் முறைமையை நோக்கிக் குடிமக்கள் வாழ்வார்கள்.

வான்நோக்கி, கோல்நோக்கி - இரண்டாம் வேற்றுமைத் தொகை

உலகு - ஆகுபெயர்

**3. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்**
**நின்றது மன்னவன் கோல்.**

அந்தணர் நூற்கும் - அந்தணர்க்குரிய வேத நூல்களுக்கும்; அறத்திற்கும் - அறச்செயல்களுக்கும் ஆதியாய் நின்றது - முதன்மையாய் நிற்பது; மன்னவன் கோல் - அரசனின் செங்கோல் முறையாகும்.

அரசனின் செங்கோல் முறைமைதான் அந்தணர்க்குரிய வேதத்திற்கும் அறச்செயல்களுக்கும் முதன்மைக் காரணமாய் நிற்பது.

**4. குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கும் உலகு.**

குடிதழீஇ - குடிமக்களை அரவணைத்து; கோலோச்சும் - செங்கோல் முறையில் ஆட்சி செய்யும்; மாநில மன்னன் - பெருமாநிலமாகிய நாட்டின் மன்னனின்; அடிதழீஇ - அடியைப் பொருந்தி; நிற்கும் உலகு - உலகத்தவர் நிற்பவர்.

குடிமக்களை அரவணைத்துச் செங்கோல் முறையில் ஆட்சி செய்யும் பெருநில மன்னனின் அடியைப் பொருந்தி உலகத்தவர் நிற்பர்.

குடிதழீஇ, அடிதழீஇ - இன்னிசை அளபெடை.

**5. இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட**
**பெயலும் விளையுளும் தொக்கு.**

இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் - இயல்பாகக் கோலோச்சும் மன்னவனின்; நாட்ட - நாட்டின் கண்ணதாகும்; பெயலும் விளையுளும் தொக்கு - மழையும் மழையினால் உண்டாகும் விளைச்சலும் ஒருசேர;

இயல்பாகக் கோலோச்சும் மன்னவனின் நாட்டில் மழையும் மழையினால் உண்டாகும் விளைச்சலும் ஒருசேர அமையும்.

**6. வேல்அன்று வென்றி தருவது மன்னவன்**
**கோல்அதூஉம் கோடாது எனின்.**

வேல் அன்று வென்றி தருவது - மன்னனுக்கு வெற்றி தருவது அவன் எறியும் வேல் அன்று; மன்னவன் கோல் - அரசனின் செங்கோல் முறைதான்; அதூஉம் கோடாது எனின் - அந்தச் செங்கோலும் வளையாதிருந்தால்.

மன்னனுக்கு வெற்றி தருவது அவன் எறியும் வேல் அன்று; அவனுடைய செங்கோல் வளையாதிருந்தால் அவனது செங்கோல் முறைதான் வெற்றி தரும்.

வென்றி – மெலித்தல் விகாரம்

கோல்அதூஉம் – இன்னிசை அளபெடை.

**7. இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின்.**

இறைகாக்கும் வையகம் எல்லாம் – உலகத்தை எல்லாம் மன்னவன் காப்பான்; அவனை முறைகாக்கும் – அந்த மன்னவனை அவனது முறைமையே காக்கும்; முட்டாச் செயின் – தடையின்றிச் செய்தால்.

எந்தத் தடையும் இல்லாமல் உலகத்தை எல்லாம் காக்கும் மன்னவனை அவனது முறைமையே காக்கும்.

முட்டா – ஈறுகெட்ட எதிர்மறை வினைஎச்சம்.

**8. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்**
**தண்பத்தான் தானே கெடும்.**

எண்பதத்தான் – எளிய தன்மையுடையவனாய்; ஓரா – ஆராயாது; முறைசெய்யா – செங்கோல் முறைமையாய் முறைசெய்யாத; மன்னவன் – அரசன்; தண்பதத்தான் – தாழ்ந்த நிலையினால்; தானே கெடும் – தானே கெடுவான்.

எளியதன்மை உடையவனாய் ஆராயாமலும் முறைசெய்யாமலும் உள்ள அரசன் தன் தாழ்ந்த நிலையினால் தானே கெடுவான்.

**9. குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்**
**வடுஅன்று வேந்தன் தொழில்.**

குடிபுறங்காத்து ஓம்பி – குடிமக்களைக் காப்பாற்றிப் பேணி; குற்றம் கடிதல் – அவரிடம் தோன்றும் குற்றங்களை நீக்குதல்; வடுஅன்று – குற்றம் அன்று; வேந்தன் தொழில் – மன்னனது தொழில் ஆகும்.

குடிமக்களைக் காப்பாற்றிப் பேணுதலோடு அவரிடம் தோன்றும் குற்றங்களை நீக்குதல் மன்னனது தொழில் ஆகும். அது மன்னனுக்குக் குற்றம் அன்று.

கடிதல் – தொழிற்பெயர்.

10. கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

கொலையின் - கொலையினால்; கொடியாரை - கொடியவர்களை வேந்துஒறுத்தல் - மன்னன் தண்டித்தல்; பைங்கூழ் களை கட்டதனொடு நேர் - பயிர்களைக் காக்கக் களையினை நீக்குவதற்கு ஒப்பாகும்.

கொடியவர்களைக் கொலையினால் மன்னன் தண்டித்தல் பயிர்களைக் காக்கக் களையினை நீக்குவதற்கு ஒப்பாகும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### பன்றிக்குட்டிகளை மந்திரிகள் ஆக்கியது

தாய்ப் பன்றியாக வந்த சிவபெருமான் மறைந்தருளிய பின்பு பன்றிமுகம் கொண்ட குமாரர்கள் பன்னிருவரும் இளங் கதிரவனைப் போல விளங்கினார்கள். பல கலைகளிலும் வல்லவர்களாகத் திகழ்ந்தார்கள். எல்லாரும் ஒன்றுசேர்ந்து பன்றிமலையில் இருந்தார்கள்.

அந்த நாளிலே மீனாட்சியம்மை சோமசுந்தரப் பெருமானைப் பார்த்து இறைவா! அறிவில்லாக் கொடிய விலங்குகளான பன்றிக்குட்டிகளுக்குப் பால் ஊட்டத் தாங்கள் பரிவெய்தியது ஏனோ? என்று நயந்து வினவினார்.

அப்போது சோமசுந்தரப்பெருமான் தேவியாரை நோக்கி, வேதங்களும் ஆகமங்களும் எம்மைச் சகல ஜீவதயாபரன் என்று மொழிகின்றன. சேதனம் அசேதனம் இரண்டும் எமக்கு ஒன்றுதான். ஆதலால் தான் தாயிழந்த பன்றிக்குட்டிகளுக்கும் மனம் இரங்கித் தாயாகிப் பாலூட்டி அருளினோம். அதனாலே பன்றிக்குட்டிகளும் வலிமையும் வெற்றியும் கல்வி முதிர்ச்சியும் ஞானமும் பெற்றன. இனி அப்பன்றிமுகக் குமாரர்கள் ராஜராஜபாண்டியனுக்கு அமைச்சர்களாக இருந்து பலவகை வளங்களையும் பெருக்குவார்கள்; பின்பு பாசங்களை ஒழித்துப் பதவி பெற்று எம்முடைய பெருங்கணத்தவர்கள் ஆவார்கள் என்று விடை பகர்ந்தருளினார்.

சோமசுந்தரக் கடவுள் அன்று இரவிலேயே ராஜராஜ பாண்டியனது கனவிலே தோன்றினார். பாண்டியனே! பன்றிமலையிலே பன்றிமுகத்தோடு பன்னிரு குமாரர்கள் வாழ்கின்றனர். அவர்கள் பேரறிவுடையவர்கள்; அவர்களை உனது சபையிலே அமைச்சர்களாக அமர்த்திக் கொள்வாய் என்று திருவாய் மலர்ந்து பின் மறைந்தருளினார். பாண்டியன் பெருமகிழ்ச்சியுடனும் பெருவியப்புடனும் விழித் தெழுந்தான்.

விடிந்ததும் தனது அமைச்சர்களை அழைத்துத் தனது விந்தைக் கனவினைச் சொன்னான். பன்றிமலைப் பன்றிமுகப் பன்னிரண்டு வீரர்களையும் அழைத்து வருமாறு பணித்தான். மந்திரியர்களும் பன்றிமலை சேர்ந்தனர். பன்றிமுகத்தோரையும் கண்டனர். ராஜராஜ பாண்டியனது விருப்பத்தைத் தெரிவித்து அவர்களை மதுரைக்கு வருமாறு வேண்டிக்கொண்டனர். பாண்டியன் விருப்பத்தை அமைச்சர்கள் மூலம் கேட்ட அப்பன்னிருவரும் மனமிசைந்து புறப்பட்டு மதுரை வந்தடைந்தனர். பாண்டிய வேந்தன் திருமுன் சென்று வணங்கி நின்றனர். பாண்டியன் அவர்களை மிகுந்த மகிழ்வுடனும் பரிவுடனும் வரவேற்றான். அவர்களுக்கு மந்திரிப் பதவியைக் கொடுத்துப் பல்வேறு சிறப்பான வரிசைகளையும் வழங்கினான். தவிர, தனது பழைய மந்திரிமார்களின் மகளிரையும் அவர்களுக்கு வேதவிதிப்படி விவாகம் செய்வித்தான்.

பன்றிமுக அமைச்சர்கள் பன்னிரண்டு பேர்களும் பாண்டியனைக் காக்கின்ற கவசம் போலவும், வழிகாட்டும் கண்கள் போலவும் பழகி வந்தார்கள். உடல்கள் பன்னிரண்டு; ஆனால், உயிர் ஒன்று என்று கூறும் படிக்கு அவ்வளவு ஒற்றுமையாக வாழ்ந்து வந்தார்கள். தங்களுக்கு உரிய கடமைகளை ஏற்றுச் செவ்வையாகப் புரிந்து வந்தனர். உளம் பொருந்திய உவகையோடு செயல் ஆற்றினர். பாலும் தேனும் கலந்தாற் போலக் கல்வியும் அறிவும் சேர்ந்து விளங்கினர். இனிய மொழிகளே பேசி யாவருக்கும் இங்கிதமாக நடந்தனர். தமக்குக் கிடைத்த பதவியினால் கருவம் கொண்டு விடாமல் ஒரு நிலையிலே நின்று ஒழுகினர். அரசனை அனல் போல எண்ணி நெருங்கியும்

நெருங்காமலும் தீக்காய்பவர்கள் போலத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு பழகினர். வேந்தன் விரும்பிய பொருள் எதையும் தாம் வேம்பு எனக் கொண்டனர்.

பன்றிமுக மந்திரிமார்களுடைய திறமையான நல்லாட்சியிலே குடிமக்கள் நல்வழியிலே சென்று சிறந்தனர். பாண்டியனது கொள்கைகளை நன்றாக ஆராய்ந்து தருமமார்க்கத்திலே நடந்தனர். இவ்வாறாகப் பன்னிருவரும் தருமம், நியாயம், நீதி, யோக்கியம், யுக்தம் முதலியன காட்டும் நேரிய வழியிலே சென்றனர். அவர்களால் பாண்டியன் ஈகையிலே, தருமத்திலே, கீர்த்தியிலே பெருகி விளங்கினான்.

சிலகாலம் கழிந்ததும் பன்றிமுகத்தார் பன்னிருவரும் சிவலோகம் சேர்ந்து சிவகணத் தலைவர்கள் ஆயினர். ராஜராஜ பாண்டியனும் இந்திர பதவிபெற்றான்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

**24.09.2020** அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 9ஆவது ஆண்டு குருபூசை விழா கோவிலூர் மடாலயத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

**25.09.2020** அன்று நிறுவனர் நாள் விழா சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்றது. குருபூசை விழாவை முன்னிட்டுக் கோவிலூர் சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலைக் கல்வி நிறுவனங்களில் பயிலும் மாணவர்களுக்கு நடத்தப் பெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர் நா.வள்ளி பரிசுகள் வழங்கி வாழ்த்துரை வழங்கினார். தொடர்ந்து பார்வை புனர்வாழ்வு மையம் சார்ந்த பயிற்சி வகுப்புகளை, காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகக் கல்வியியல்துறை மேனாள் புல முதல்வர் முனைவர் எஸ். மோகன் தொடங்கி வைத்துச் சிறப்புரை ஆற்றினார்.

நிகழ்ச்சியின் போது கல்வி நிறுவனங்களில் பணியாற்றும் ஆசிரியர்கள் பலருக்கு மிகச்சிறந்த ஆசிரியர் விருது வழங்கப் பெற்றது.

## கவிச்செம்மற் கில்லை இறப்பு

(தமிழாகரர் தெ.முருகசாமி)

கவிச்செம்மல் முத்துக்
கணேசனார் தானும்
புவிபுகழ் காரைக்
குடியில் - நவிலும்
ஒருபுள்ளி உத்தமராய்
ஊருலகம் போற்ற
இருந்தார்க் கிலையே
இறப்பு!

ஏனெனில் அம்மைக்குப் பல்லாண்டு பாடியே
ஏரார் பெருமாளின் கோவிலிலும் - ஏற்ற
நகரச் சிவனது கோயிலிலும் யாரும்
பகரப் பதிப்பித்தார் பார்த்து!

மற்றுமுள காரைநகர்
கோவிலின் சன்னிதியில்
பற்றுடன் மக்கள்தான்
பாடிட - உற்ற
கடவுளர்க் கேற்ற
கனிவான பாடல்
தடம்பதித்தார் தன்னார்வத்
தால்!

கோவிலூர் குன்றக் குடியாதீ னங்களின்
ஓவியமாய் ஆசி பலபெற்றார்! - பூவில்
நுகரும்தேன் வண்டாய் நலம்பொலிந்து வாழ்ந்தார்!
பகருமிரு ஆதீனத் தால்!

அரிமா கழக
    அருந்தூணாய், ஆன்ற
உரிமை உவப்பாய்த்தன்
    பேரில் – சரியான
ஈரிடத்தில் நல்ல
    அறக்கட் டளை அமைத்தார்
ஈண்டவர்க்கு நீளும்
    இசையால்!

இலக்கிய நற்கழகம் என்கின்ற பேரில்
நலக்கினிய நூல்கள் நயந்தே – கலக்கமின்றித்
தாமாகப் பன்னூல் வெளியிட்டார்! தன்னிறைவைத்
தாம்பெற்றார் தாமே தனித்து!

அன்னார் வெளியீட்டில்
    நல்முத்தொள் ளாயிரத்தின்
பொன்னார் உரைக்கில்லை
    ஈடென்பேன்! – என்போலப்
போற்றிப் புகழப்
    புலவர் படிப்பிற்கே
ஏற்றபாட நூலாச்சே
    அன்று!

சீரார் சிவகங்கை சீல எழுத்தாளர்
பேரார்ந்த சங்கப் பரிசிற்குத் – தாராள
மாகவே தம்பெயரில் தந்தார்; தமிழ்மொழியைத்
தாகமாய்த் தான்குடித்த தால்!



---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்